சம்பூர்ண யோகம்

100 நாள்

டெபாசிட் சேகரிப்பு விழா

# டெபாசிட் திட்டங்கள்

## ஃபிக்சட் டெபாசிட்

| காலம் | வட்டி விகிதம் (ஆண்டிற்கு) | குறைந்த பட்ச டெபாசிட் தொகை |
|---|---|---|
| ஓர் ஆண்டு | **24%** | ரூ.10,000/- |

ஊக்கத் தொகை 1%

## க்யூமுலேடிவ் டெபாசிட்

| காலம் | டெபாசிட் தொகை | முதிர்வுத் தொகை | வருடாந்தர வட்டி | ஊக்கத் தொகை |
|---|---|---|---|---|
| 13 மாதம் | ரூ.10,000/- | ரூ.13,000/- | 27.70% | 1.5% |
| 25 மாதம் | ரூ.10,000/- | ரூ.16,000/- | 28.80% | 3.0% |
| 37 மாதம் | ரூ.15,000/- | ரூ.30,000/- | 32.4% | 4.5% |

## ஈஸ்வரி பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.25,000
இரு மடங்காகிறது
37 மாதங்களில்
ரூ.50,000/-
ஊக்கப்பரிசு
4 கிராம் தங்கக்காசு

## திருமலா பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.50,000
மும் மடங்காகிறது
60 மாதங்களில்
ரூ.1,50,000/-
ஊக்கப்பரிசு
8 கிராம் தங்கக்காசு

ESWARI

**ஈஸ்வரி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்**

(ஈஸ்வரி குரூப் நிறுவனங்கள்)

தலைமை & நிர்வாக அலுவலகம் 4, எல்டாம்ஸ் ரோடு, முதல் மாடி, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018. தொலைபேசி: 455349, 459557, 457583.

கிளைகள் : நெ. 13, ரட்டன் பஜார், பாரிமுனை, சென்னை-3. போன்: 560767, 49, வடக்கு உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-17. போன்: 8259661, 69, முதல் மாடி, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, புரசைவாக்கம், சென்னை-7. போன்: 5324937, 5324940, நெ. 72, ஜிஎஸ்டி ரோடு, குரோம்பேட்டை, சென்னை-44. போன்: 405845, நெ. 11, பாரதி சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-5. போன்: 841187, நெ. 19/6, 4வது மெயின் ரோடு, முதல் மாடி, நங்கநல்லூர், சென்னை-61. போன்: 2345891, நெ. 13, ஆற்காடு சாலை, சாலிக்கிராமம், சென்னை-93. போன்: 428650, நெ. 25, முதல் மாடி, ஜவஹர்லால் நேரு தெரு, பாண்டிச்சேரி-1. போன்: 31830.

கோயம்புத்தூர், மதுரை, திருச்சி, சென்னை (அண்ணா நகர், மைலாப்பூர் மற்றும் அடையார்) கிளைகள் விரைவில் திறக்கப்படவுள்ளது.

எல்லா ஞாயிறு அன்றும் அலுவலகம் இயங்கும்

**உங்கள் வளர்ச்சி ஈஸ்வரியுடன் வளரட்டும்**

LOTUS/95



• பேனசிர் : திண்டாட்டம்



• கலவரத்துக்கு நடுவே க(லவ)ராச்சி

இந்தியாவின் சில பகுதிகளில் கலவரங்கள் தலை தூக்கும்போது 'பாக். தீவிரவாதிகள்' அதன் பின்னணியில் இருப்பதாகத் தெரியவருகிறது. இப்போது பாகிஸ்தானிலேயே பற்றி எரிகிறது பிரச்னை....

# பற்றி எரிகிறது பாகிஸ்தான்!

**பா**கிஸ்தானிலுள்ள சிந்த் மாநிலத்தின் முக்கியமான நகரமான கராச்சி, ஒரு மாதமாகவே கலவரத்தினால் காயப்பட்டுக் கிடக்கிறது. இதுவரை 1000க்கும் மேற்பட்ட மக்கள் இந்தக் கலவரங்களில் இறந்திருக்கிறார்கள்.

கலவரத்துக்குக் காரணம் என்ன?

சிந்த் பகுதியில் உருது மொழி பேசுவோர் மொஹாஜிர் என்ற ஓர் இயக்கத்தின் கீழ் ஒருங்கிணைந்துள்ளனர். இவர்களுக்கும், சிந்தி மொழி பேசும் சிந்திகளுக்கும் இடையே மோதல். இந்த மோதல்தான் கலவரமாகி சிந்த் மாகாணத்தின் ஹைதராபாத் நகருக்கும் வேறு பல நகரங்களுக்கும் பரவியிருக்கிறது.

1989இல் பேனசிர் புட்டோ பதவிக்கு வர உதவியது மொஹாஜிர் இயக்கம். ஆனால் ஒரே ஆண்டில் அந்த நட்புறவு முறிந்து போய் விட்டது. தொடர்ந்து கலவரங்கள் ஆரம்பித்து விட்டன. பாக். உளவுத் துறையையும் ஐ.எஸ். ஐயையும் கொண்டு மொஹாஜிர் இயக்கத்தில் பிளவு உண்டாக்க முயற்சிகள் எடுத்தது அரசு. ஆனால் இது நடக்கவில்லை. மாறாக, கலவரங்கள் முற்றி விட்டன.

'சிந்த் மாகாணத்திலுள்ள உருது மொழி பேசும் மக்களைப் பழிவாங்குகிறது பாக். அரசு' என்பது மொஹாஜிர்களின் குற்றச்சாட்டு. அரசோ, இவர்களை 'பயங்கரவாதிகள்' என்று முத்திரை குத்தி விட்டது. அவர்களுடன் பேச்சு வார்த்தை நடத்த மறுக்கிறது.

பாதிப்பு சராசரி மக்களுக்குத்தான். தீயணைப்பு வண்டிகள், லாரிகள், கார்கள் என்று சகட்டுமேனிக்குத் தெருவில் வைத்துக் கொளுத்துகிறார்கள் போராட்டக்காரர்கள். தொடர்ந்து, நாள் கணக்கில் கடைகள் மூடப்பட்டுக் கிடப்பதால் அத்தியாவசியப் பொருள்களைக் கூட வாங்க முடியாத நிலை.

இந்த கலாட்டாவுக்கிடையே பிடிவாதமாகப் பள்ளித் தேர்வுகளை நடத்தி முடித்திருக்கிறது பாக். அரசு! பயங்கர வெடிச்சத்தங்களுக்கிடையே 80,000 மாணவர்கள் பரீட்சை எழுதியிருக்கிறார்கள்!

**மொ**ஹாஜிர் இயக்கத் தலைவர் என்று சொல்லிக் கொள்ளும் அல்டாஃப் ஹுசைன், லண்டனில் உட்கார்ந்து கொண்டு, "வாகனங்களைக் கொளுத்தாதீர்கள்; பேனசிர் புட்டோ அரசுக்கு எதிராக அமைதிப் போராட்டம் நடத்துங்கள்" என்று 'தொண்டர்'களுக்கு அறிக்கை விட்டுக் கொண்டிருக்கிறார்!

எதிர்க்கட்சித் தலைவரான நவாஸ் ஷரீஃப், பாக். அரசின் போக்கைக் கண்டித்து எச்சரித்திருக்கிறார். அல்டாஃப் ஹுசைன் மீது பொய் வழக்கு ஜோடிப்பதையும் மொஹாஜிர்களைத் துன்புறுத்துவதையும் அரசு கைவிட வேண்டும் என்கிறார். இதில் வேடிக்கை என்னவென்றால், இவர் பிரதமராக இருந்த காலத்தில் ஹுசைன் மீது வழக்குகள் போட்டிருக்கிறார். இப்போது அந்த வழக்குகளையும் விலக்கிக் கொள்ளும்படி பேனசிர் அரசுக்கு 'அறிவுரை' சொல்கிறார் ஷெரீஃப்.

இதற்கிடையே, சிந்த் மாநில சட்டசபை உறுப்பினர்களுள் மொஹாஜிர் இயக்கத்தைச் சேர்ந்த இரண்டு பேரை உளவுத் துறையே கடத்திக் கொண்டு போய் விட்டது!

மொழி, இன பேதத்தால் முளைத்த ஒரு பிரச்னை, அரசியல் நோக்குகளால் தீவிரப்படுத்தப்பட்டுவருகிறதேயொழிய தீர்வுக்கு முயற்சிகள் எடுக்கப்படுவதாகத் தெரியவில்லை.

'பாக். அரசு, மக்களைக் காப்பாற்ற முயற்சியே எடுக்கவில்லை' என்று குற்றம் சாட்டியிருக்கிறது 'அம்னெஸ்டி இன்டர் நேஷனல்' என்ற சர்வதேச கண்காணிப்பு அமைப்பு.

பேனசிர் பாடு திண்டாட்டம்தான்!

— எஸ்.வி.என்.

படம் - நன்றி : தினமலர்



• மகளுடன் குலாப்

# சாம்பல் பூத்த மலர்!

**ப**ன்னிரண்டு வயதிலேயே திருமணமாகி விட்டது அந்தச் சிறுமிக்கு. பெயர் 'குலாப்' - ரோஜாப்பூ என்று அர்த்தம். கூடப் பிறந்தவர்கள் எட்டு பேர். அவர்கள் எல்லோருமே பத்து வயதுக்கு உட்பட்ட சிறுவர், சிறுமியர். அத்தனை பேரையும் நிராதரவாக விட்டு விட்டு அப்பா இறந்து விட, பொறுப்பு முழுவதும் பக்கத்து கிராமத்தில், புகுந்த வீட்டில் இருந்த குலாப்பின் தோள்களுக்கு வந்து சேர்ந்தது.

நேராக மாமனாரிடம் போனாள் குலாப். நிலைமையை விளக்கினாள். "என் குடும்பத்தைக் காப்பாற்ற என் தந்தையின் தொழிலை நான் ஏற்றுச் செய்வதைத் தவிர வேறு வழியில்லை" என்றாள். மாமனார் சம்மதித்து அனுப்பி வைத்தார்.

சுமார் எழுபது வருடங்களுக்கு முன்னால் நடந்த இந்த நிகழ்ச்சி ஒரு மாபெரும் புரட்சி! குலாப் செய்ய ஆரம்பித்தது அவரது தந்தை செய்து வந்த வெட்டியான் தொழிலை!

ஏழைமையும் இயலாமையும் உந்தித் தள்ளினாலும் எத்தனை பெண்களால் இப்படியொரு முடிவை எடுத்து விட முடியும்!

அந்தத் தொழிலிலும் போராட வேண்டியிருந்தது. நிராதரவான குடும்பத்தைப் பார்த்து, சுற்றுவட்டாரத்தவர் அனுதாபப்பட்டாலும், தந்தையின் தொழிலை மகள் ஏற்பதை எதிர்த்தனர். குலாப்பின் உயிருக்கே ஆபத்து விளைவிக்கக்கூடிய முயற்சிகளில் இறங்கினர். தந்தை பணியாற்றிய தராகஞ்ஜ் மயானத்தை விட்டு வெளியேறி ரசூலாபாத் மயானத்துக்கு இடம்பெயர்ந்தார் குலாப்.

ரசூலாபாத் இடுகாட்டின் முடிசூடா அரசியாகக் கருதப்படுகிறார் குலாப் மஹாராஜின். இந்தியாவின் முதல் பெண் வெட்டியான்! இவர் கணவர், சங்கர்காட் என்ற இடத்தில் மின்சார மயானத்தில் பணிபுரிகிறார்.

இதுவரை ஆறு லட்சத்துக்கும் மேற்பட்ட சமக்கடன்களை நிறைவேற்றி வைத்துள்ளார் குலாப். இன்னமும் நள்ளிரவு வரை வேலை செய்துவிட்டு கற்பூர வாசனையும் தலையில் சாம்பலுமாகத்தான் வீடு திரும்புகிறார்.

வீடு...? மூன்றடுக்கு மாடிக் கட்டடத்தின் உரிமையாளர் இவர்! ஐந்து குழந்தைகள். மகன்கள் மூவருமே உயர்ந்த நிலைகளில் இருக்கிறார்கள். ஒரு மகன் லண்டன் நகரில் பி.பி.சி. ஹிந்தி பிரிவில் வேலை செய்கிறார்; மற்றொருவர் பண்டேல்கண்டு பல்கலைக்கழகத்தின் பொருளாதாரத்துறைப் பேராசிரியர்; மூன்றாவது மகன் அம்மாவுடன் இருந்து தொழிலுக்கு உதவி வருகிறார். இரண்டு பெண்களும் முதுகலைப் பட்டம் பெற்றவர்கள். எல்லா குழந்தைகளுக்குமே திருமணமாகி விட்டது.

அப்புறம் ஏன் குலாப் இந்தத் தொழிலில் தொடர வேண்டும்...?

"இந்தப் பிணங்கள் இல்லாவிட்டால் என்னால் உயிர் வாழ முடியாது..." - இதுதான் குலாப் சொல்லும் பதில்!

- கலா

நன்றி : ராஷ்ட்ரிய சஹாரா

# குமரி கலக்கல்ஸ்!





●● கோடிகள் சாதாரணமாகிவிட்ட இந்த நாளில், லட்சம் - அதுவும் அரை லட்சம் என்பது சாதாரணமாய் இருக்கலாம். ஆனால் 1949 இல் அது மாபெரும் தொகை. கலைவாணர் என்.எஸ்.கே. நாகர்கோவில், சர் சி.பி. நினைவுப் பூங்காவில் காந்தி நினைவு ஸ்தூபியை நிறுவியதற்கு ஆன செலவு அது. அதன் திறப்பு விழாவில் (13.9.1949) கலந்துகொண்ட கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை வழங்கிய வாழ்த்துக் கவிதை இது:

மங்கை மதுரம்
மணவாளன் கிருஷ்ணனிவர்
செங்கைப் பொருளின்
திருப்பணியாம் பொங்குபுகழ்
காந்திமகான் கற்பித்த
கற்பனைகள் அத்தனையும்
ஏந்தியெழும் தூபி இது!

நாகர்கோவில்,
நாஞ்சில் இராமநாதன்.

●● இன்று இந்தியா முழுவதும் லாட்டரி முறை சக்கை போடு போடுகிறது. இதன் ஆரம்பம் குமரி மாவட்டத்தில்தான் இருந்திருக்கும் என்று நம்ப வேண்டியுள்ளது. சுசீந்திரம் தாணுமாலய பெருமாள் கோவில் திருப்பணிக்கு நிதி திரட்ட, திருவிதாங்கூர் மன்னர் ஒரு லாட்டரியை அறிமுகப் படுத்தினார் (கொல்லம் ஆண்டு 1050 - ஆவணி மாதம் ஏழாம் நாள்) ஒரு ரூபாய்க்கு ஒரு லாட்டரி சீட்டு விற்று 50,000 ரூபாய் திரட்டி கோபுரத் திருப்பணி நிறைவேற்றப்பட்டது.

மேற்கு சூரப்பள்ளம்,
குமரி குமார்.

●● எங்களூர் தாத்தா ஒருவர் சளைக்காத உற்சாகப் பேர்வழி. அவரை மடக்குவதே எங்களுக்கு வேலை! ஒரு மாலைப் பொழுதில் அவர் மற்றொருவருடன் மும்முரமாகப் பேசியபடி வந்து கொண்டிருந்தார். "என்ன தாத்தா சாயந்திரம் ஆனால் கண் சரியாகத் தெரியலைன்னீங்க; இப்ப தூரத்துல வர ஆசாமியைக் கூட அடையாளம் சொல்றீங்களே!" என்று வம்புக்கிழுத்தேன். "கண்ணுதானே தெரியலைன்னு சொன்னேன். முகம், உடம்பு, கால், கை எல்லாம் நல்லாத்தானே தெரியுது" என்று என் இடக்கை அடக்கி விட்டார் தாத்தா.

குமரி குமார்.

●● 'அலைகள் ஓய்வதில்லை' பட ஷூட்டிங்கை பாரதிராஜா எந்த நேரத்தில் நடத்தினாரோ... அன்று முதல் இன்றுவரை குமரியில் 'ஷூட்டிங்' அலை ஓயவில்லை. வருஷம் 16, தங்கக் கொலுசு, தேவா, ஹிஸ் ஹைந ப் அப்துல்லா, மணிச்சித்திரத்தாழ் என்று பட்டியல் விரிகிறது. இவற்றுள் இரண்டு மலையாளப் படங்களும் வருஷம் 16 படமும் பத்மநாபபுரம் அரண்மனையில் படமாக்கப்பட்டவை. இந்த அரண்மனையில் ஒரு சீனாவது எடுத்தால் படத்துக்கு வெற்றி உறுதி என்ற நம்பிக்கை வளர்ந்துள்ளது.

தக்கலை, லீலா ராம்






●● மைலாடி என்ற ஊரின் பெயரை ஆங்கிலத்தில் Mylady என்று அறிவிப்புப் பலகையில் எழுதியுள்ளார்கள். அவ்வழியே சென்ற வெளிநாட்டுத் தம்பதி அந்தப் பலகையைப் பார்த்ததும் காரை விட்டு இறங்கி விட்டனர்.

"அடடா, இந்தியர்கள்தான் பெண்களுக்கு எவ்வளவு மரியாதை தருகிறார்கள்! தங்கள் மனம் கவர்ந்த பெண்ணின் நினைவாக ஒரு ஊருக்கே பெயர் வைத்திருக்கிறார்களே!" என்று ஆச்சர்யப்பட்டனர். (My Lady என்றால் எனது நாயகி அல்லது எனக்குரியவள் என்று பொருள்.)

இந்தக் காட்சியைப் பார்த்து என் தோழியும் நானும் சிரியோ சிரியென்று சிரித்தோம்.

நாகர்கோவில், ராதிகா அழகப்பன்.

# கல்லுக்கு ஒரு கண்காட்சி; வெற்றிக்கு அது சாட்சி!

"கல்லை வெட்டி, கப்பலேற்றி, காசு பண்றாங்கப்பா" என்ற கேலியான சொற்களைக் கேட்டுப் பழகியிருந்த எனக்கு, ஜெர்மனி, நியூரம்பர்க் நகரில் சர்வதேச கிரானைட் கண்காட்சி நடக்கப் போவதாகப் பத்திரிகையில் படித்ததும் ஆச்சர்யமாகத்தான் இருந்தது. 'கற்களைக் கொண்டு வந்து கண்காட்சி நடத்துவதாவது' என்று நினைத்ததோடு, இந்தத் தொழில் - வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ள ஜெம் கிரானைட்ஸ் வீரமணியைச் சந்திக்க நேர்ந்தபோது கேட்டே விட்டேன்.

"ஏன், வந்து பாருங்களேன்; அங்கு வந்து கடை விரிக்கிற பல நாட்டவருடன் பேசுங்களேன்; அப்போது புரியும். உங்கள் வாசகர்களுக்கும் புரிய வைக்கலாம்" என்றார்.

அவர் அழைப்பை ஏற்று நான் விமானம் ஏறியதில் வியப்பில்லை; என்னுடன் ஜெம் கிரானைட்ஸ் தொழிலாளர்கள் நாலு பேர் விமானமேறியதுதான் வியப்பு!

"ஜெம் கிரானைட்ஸ் நிறுவனத்தின் வெற்றியிலே உங்களுக்கும் பங்கு உண்டு; பெருமிதத்தோடு வந்து பாருங்க; இதே தொழிலை அயல்நாட்டவர் எப்படி செய்கிறார்கள் என்பதையும் தெரிஞ்சுக்குங்க" என்று தொழிலாளரிடம் சொல்லி அனுப்பியிருக்கிறார் வீரமணி. 'எத்தனை தொழிலதிபர்களுக்கு இத்தகைய பெருந்தன்மை இருக்கும்' என்று யோசித்தவாறே ஃபிராங்க்ஃபர்ட் விமான நிலையத்தில் இறங்கியபோது ஒரு ஏமாற்றம் காத்திருந்தது. நியூரம்பார்க் செல்லும் விமானத்தில் இடமில்லை. சர்வதேச சந்தைக் கும்பல்தான் காரணம்.

"காரிலேயே போய் விடலாம்" என்றார் என்னை ஃபிராங்ஃபர்ட்டில் சந்தித்த ஜெர்மானியர். இவர் வீரமணியின் ஜெம் கிரானைட்டுகளை இறக்குமதி செய்பவர். 'விமான ரிசர்வேஷன் கிடைக்காததே நல்லதாயிற்று' என்று நிரூபித்தது கார் பயணம். இரு பக்கமும் பசுமையான மரங்கள்; அல்லது வயல்வெளிகள். இடையே வளைந்து நெளிந்து பரிசுத்த நீருடன் இருமுறை குறுக்கிடும் மைன் ஆறு. ஆங்காங்கே தங்கத்தை உருக்கி வார்த்தாற்போன்ற மஞ்சள் பூக்கள் நிறைந்த மைதானங்கள். பசுமைக் குன்றுகள். மொசைக் தளம் போன்ற வழவழப்பான சாலையில் வழுக்கிச் செல்லும் கார். 120 கி.மீ. வேகம்.

"இந்த ஆட்டோ பான் (நெடுஞ்சாலை) ரிப்பேரே ஆகாதா?"

"அதையேன் கேட்கறீங்க; பதினைந்து பதினாறு வருஷத்துக்கு ஒருமுறை ரிப்போர் கேட்கும்! அப்போ நாங்க படற அவஸ்தை...!"

நான்தோறும் அவதிப்படும் நாம், அவரது அலுப்பு சலிப்பு கண்டு சிரிப்பதா, அழுவதா? செலவு அதிகமானாலும் உறுதியாகப் போட்டு விடுவது நீண்ட கால நோக்கில் மலிவானது என்பதைப்



• கண்காட்சி முகப்பு : சுவரல்ல; கிரானைட் கற்கள்!



• கிரானைட் ஆப்பிள்



• கண்காட்சியில் 'ஜெம்' ஷோரூம் : நடுவே - 'கிரானைட் கிங்' வீரமணி

புரிந்து கொண்டிருக்கும் ஜெர்மானியரைப் பார்த்துப் பெருமூச்சு விடத்தான் முடிந்தது.

"அது சரி, உங்க ஊரில் லாரி எதுவுமே கிடையாதா?"

"இன்று விடுமுறை. அடுத்து, வார இறுதி நாட்கள் என்பதால் எல்லாரும் வித்தியாச சூழ்நிலையை விரும்பி குடும்பத்தோடு காரில் கிளம்பி விடுவார்கள். சாலைகளில் நெரிசலையும் விபத்துக்களையும் தவிர்க்க லாரிகளுக்குத் தடை. உணவு வேன்களுக்கு மட்டும் விதிவிலக்கு."

'அடேயப்பா! மக்கள் நலனில் அக்கறை கொண்டு இவ்வளவு முன்யோசனையுடன் காரியம் செய்யும் அரசும் உலகில் உண்டா?' நமக்குப் புதுமையாகத்தான் இருக்கிறது!

ஆட்டோ பான் குறுக்கே யாரும் நடக்கக் கூடாது; அதற்கு அவசியமும் இல்லை. ஆங்காங்கே மேம்பாலங்கள், வழியிலுள்ள சிற்றூர்களை இணைக்கின்றன. ஆயிரக்கணக்கான கார்கள் 'ஜெ' ஊர்வலத்தை விடவும் நீளமாகச் சென்றபோதிலும் ஹாரன் ஒலிப்பதே இல்லை! அது அநாகரிகம். ஹாரன், அபாய அவசரத்துக்கு மட்டுமே. விதிமுறைகளை எல்லோரும் பின்பற்றும்போது அபாயம் வெகு அபூர்வம்.

ஒன்பது மணி நேர விமானப் பயணம், தொடர்ந்து ஐந்து மணி நேர கார் பயணம். நியூரம்பெர்க்கை அடைந்ததும் மனம் ஹோட்டல் அறையை நாடியது. ஆனால் ஜெர்மானிய நண்பர் நேரே கண்காட்சி நடக்கும் இடத்தையே நாடினார்! ஓய்வாவது ஒன்றாவது! குளியலாவது சாப்பாடாவது? வந்த காரியத்தைப் பாருய்யா! களைப்பு, கால வித்தியாசம் முதலியவற்றை எண்ணிப் பார்த்தால்தானே சோர்வு? நினைத்துப் பார்க்க யார் விட்டார்கள்! இதுதான் ஜெர்மனி! உலக நாணயங்களிலேயே மதிப்பு மிக்கதாக ஜெர்மானிய மார்க் விளங்குவதில் வியப்பு என்ன!

கண்காட்சிக்கென்றே ஏற்பட்ட இடம். நிரந்தரக் கட்டடம். பல்லாயிரம் கார்கள் நிறுத்த வசதியிருந்தும் ரொம்பி வழியவே, நமது காருக்கு இடமின்றித் தவித்து, கடைசியில் ஒரு முடுக்கில் பார்க் செய்து, உள்ளே நுழைந்தால் சென்னை ஐ லண்ட் கிரவுண்டுக்கு கூரை வேய்ந்தது போல் விசாஆஆஆலமாய் நீண்டு பரந்து...

திரும்பின பக்கமெல்லாம் கிரானைட் கற்கள்தாம்! எத்தனை ரகம்! இளஞ்சிவப்பு, கருஞ்சிவப்பு, ரத்தச் சிவப்பு, இடைத்தரச் சிவப்பு, சிவப்பில் கறுப்பு இழைகளோடு, புள்ளி வைத்தாற்போன்றது என்று தினுசு தினுசாக. அப்படியே நீலம், பச்சை, மஞ்சள், வெள்ளை, கறுப்பு என்று பல்வேறு நிறங்களில் பல்வேறு வெரைட்டிகள். பாளம் பாளமாக வெட்டப்படும்போது அளிக்கும் தோற்றம்;

வெட்டி பாலீஷ் ஏற்றிய பிறகு கண்ணைப் பறிக்கும் காட்சி. தவிர, ரத்தினங்கள், மரகதம், கோமேதகம்...

இவற்றை வெட்டி எடுக்க, விதம் விதமான அளவுகளில் அறுக்க, பாலீஷ் ஏற்ற இயந்திரங்களின் அணிவகுப்பு.

கிரானைட் தவிர மார்பிள். இத்தாலிய சலவைக் கல்லுடன் போட்டி போட யாரால் முடியும்? வாஷ்பேசின் முதல், படிக்கட்டுக்கள், பொங்குபுனல்கள், அரண்மனை முகப்புக்கள் வரை சலவைக் கல்லிலே கண்காட்சி அமைத்து அசத்தினார்கள். இதமான நிறங்கள்; இளம் காதலியின் கன்னம் போன்ற பளபளப்பு, வருடலுக்கு அழைக்கும் வழவழப்பு.

ஆனால் உறுதி, நீடித்த உழைப்பு, விலை என்று பார்க்கும்போது சலவைக் கல்லை விடவும் பாலீஷ் ஏற்றப்பட்ட கிரானைட்டுக்கு இன்று மவுசு அதிகரித்து வருகிறது! வெளிப்புற, உட்புறச் சுவர்களில் பதித்து விட்டால் அழகு, பளபளப்பு! அழுக்கு சேராது துடைத்து வைத்துக் கொள்ளலாம் என்று பல வசதிகள். எனவேதான் ஐந்து கண்டங்களிலிருந்தும் பல்வேறு நாட்டு கிரானைட் ஏற்றுமதியாளர்கள் வந்து தங்கள் சரக்கின் உயர்வை உணர்த்த 'ஷோ' காண்பித்தார்கள். அவரவர் சக்திக்கு ஏற்ப அலங்கரிக்கப்பட்டிருந்த ஸ்டால்கள் தவிர சினிமா, வீடியோ காட்சிகளும் உண்டு. வருகிறவர்களை வரவேற்று சிற்றுண்டியும் காப்பியும் மதுவும் வழங்குதலும் உண்டு.

முக்கியமாக ஆர்கிடெக்டுகள். மேல்நாடுகளில் கட்டடம் என்றால் ஆர்கிடெக்ட் சொன்னதே சட்டம். அவர் டிசைன் போட்டுத் தருவதுடன் நிற்பதில்லை. கட்டுமானத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் ஆளுமை செலுத்துகிறார். அவர் தேர்ந்தெடுக்கிற பண்டங்களையே பயன்படுத்த முடியும். எனவே இவர்களுக்குக் கண்காட்சியில் ஏக உபசாரம்! அடுத்து காண்டிராக்டர்கள், கிரானைட் இறக்குமதியாளர்கள், கப்பல் நிறுவனத்தினர், அவர்களின் ஏஜெண்டுகள், அனைவரிலும் முக்கியமாக சவ அடக்கம் செய்வோர்!

காரணம் இருக்கிறது. பிறப்பவரெல்லாம் இறப்பது உறுதி என்று தெரிந்தே இருப்பதால், நாம் இறந்த பிறகு எங்கு புதைக்கப்படுவோம்? எப்படி? புதைக்கப்பட்ட இடத்தில் எத்தகைய நினைவுச் சின்னம் இருக்கும்? அதிலுள்ள வாசகம் என்ன? என்பதிலெல்லாம் மேல்நாட்டவர் மிகுந்த அக்கறை செலுத்துகிறார்கள். எனவே சவ அடக்கம் செய்யப்படும் இடத்தில் நிறுவப்படும் நினைவுக் கற்களுக்கு ஏக கிராக்கி. மாக்தலீனியும் ஏசுவும்; குழந்தை ஏசுவும் அன்னை மேரியும் என்று பலரக சிற்பங்களைச் செதுக்க வேண்டியிருப்பதால் நமது சிற்பிகளுக்கும் நிறைய வேலை வாய்ப்பு!

தவிரவும் புதிய புதிய கண்டுபிடிப்புக்களும் கண்காட்சியில் காணப்பட்டன. உதாரணமாக குளியலறையில் வழுக்கி விழுந்து எலும்பை முறித்துக் கொள்வோர் ஏராளம் என்பதால் வழுக்கி விடாத (slip stop) கிரானைட் சில்லுகளைத் தரையில் பரப்பத் தயாரிக்கிறார்கள். அழகு, சுத்தம் இவற்றுடன் பாதுகாப்பும் கூட.

கிரானைட் என்பது வெறும் பாறைதான். ஆனால் அதை வெட்டி எடுத்து, கல்லாகவோ சில்லாகவோ தேவைப்பட்ட அளவுகளிலும் டிசைன்களிலும் தயாரித்து பாலீஷ் ஏற்றி ஏற்றுமதி செய்வதில்தான் ஆற்றல்

இருக்கிறது. முன்பெல்லாம் பாறைகளையே ஏற்றுமதி செய்தோம். இப்போது அவற்றை உருமாற்றி தேவைகளை அனுசரித்து அனுப்புகிறோம். இதனால் மதிப்பு உயர்கிறது. (value added) கூடுதலாக அந்நியச் செலவாணி கிடைக்கிறது.

அடங்காத டாலர் தாகம் உள்ள நமது நாட்டுக்கு கிரானைட் ஏற்றுமதி வற்றாத குற்றாலம் அருவி. அத்தனை கிரானைட் இங்கு உள்ளது. இந்த லட்சுமி கடாட்சத்தைப் புரிந்து கொண்டு நாட்டை உயர்த்துவதோடு தங்களையும் உயர்த்திக் கொள்ளும் பலருள் முன்னணியில் நிற்பவர் வீரமணி. இதற்கேற்ப அவருடைய ஜெம் கிரானைட் ஸ்டால் இந்த சர்வதேச சந்தையில் பெரிதாகவும் கண்ணைக் கவருவதாகவும் அமைந்திருந்தது. நமது புராதன சிற்பக் கலையின் சிறப்பை உணர்த்தும் விதமாக ஒரு பக்கம் புத்தர், மறுபுறம் மதர்ப்பான வடிவத்தில் ஒரு தேவகன்னிகை. இடையே நுழைவாயிலின் இருபுறமும் அன்னச் சிகரத்துடன் ஐந்துமுக குத்துவிளக்குகள். இந்திய, ஜெர்மானிய மற்றும் ஐரோப்பிய யூனியனுக்கான மூன்று கொடிகள் முகப்பிலே அசைந்தாட 'வெல்கம்' சொன்னதே கிரானைட் கற்கள்தாம். கிரானைட் சில்லுகளில் மொசைக் போன்று கோலங்கள் போட்டு, ரத்தினக் கம்பளம் விரித்த மாதிரி தோற்றமளிக்கச் செய்யும்போது, வெல்கம் என்ற எழுத்துக்களைப் பொலியச் செய்வதுதானா கஷ்டம்? ஒரு பிரும்மாண்டமான சிவப்புக்கல் ஆப்பிள் பசுமையான இலையுடன் பளபளத்து, போவோர் வருவோரையெல்லாம் ஈர்த்துக் கொண்டிருந்தது. மேசை இழுப்பறைகள் போலிருந்த தட்டுக்களில் விதம்விதமான நிறங்களில், டிசைன்களில் கிரானைட் பாளங்கள் பரிசீலனைக்குத் தயாராக இருந்தன.

ஜெம் கிரானைட்ஸ் ஸ்டாலில் மற்ற உலக நாடுகளிலிருந்து வந்தவர்களின் ஸ்டால்களை விடவும் கூட்டம் மொய்த்தது; கலகலப்பு மிகுந்து இருந்தது என்றால் அதற்குக் காரணம் ஸ்டாலின் அழகும் அத்துடன் வீரமணியின் ஆகர்ஷண சக்தியும். அவர் வரவேற்கிற பாங்கும் பேசிப் பழகுகிற விதமும் வாடிக்கையாளரை வளைத்துப் போடுகிறது; புதிய வாடிக்கையாளரை ஈர்க்கிறது. அவர் பேசிக் கொண்டே இருக்கும்போது திடுமென வியாபாரம் படிகிறது. காகிதமா, கையெழுத்தா? 'கிரானைட் கிங்கின் சொல் போதும்' என்று கூறி கைகுலுக்கிச் செல்கிறார்கள்.

ஜெம் கிரானைட் ஸ்டாலை விடவும் அதிகமான கூட்டம் வந்த இடம் ஒன்று உண்டென்றால் அது மகளிருக்காகப் பச்சை, நீலம், மஞ்சள், சிவப்பு என்று பல நிறக் கற்களில் மணிமாலைகளும் காதணிகளும் விற்ற கடையில்தான்!

வீரமணி மட்டுமே இந்தியாவில் நூற்றுக்கணக்கான புதிய ரக கிரானைட் படிமங்களைக் கண்டுபிடித்து கட்டுமானப் பணியில் புழக்கத்துக்குக் கொண்டு வந்திருக்கிறார் என்றால் அது கிரானைட் ஏற்றுமதியில் இந்நாடு எவ்வளவு சாதிக்கலாம் என்பதற்கு எடுத்துக்காட்டு.

அந்த சாதனையில் உலகநாடுகளிடமிருந்து எவ்வளவு போட்டியை எதிர்பார்த்து சமாளிக்க வேண்டியிருக்கும் என்பதற்கு நியூரம்பர்க்கில் நடந்த அகில உலக கிரானைட் கண்காட்சி ஓர் எச்சரிக்கை.

'கல்லைக் கப்பலேற்றி காசு பண்ணுறாங்க' என்று ஏளனமாய்ப் பேசுவோருக்கு ஒரு புதிய பாடம்.

வாக்குத் தவறாமையும் தரமும் வியாபார நுணுக்கங்களும் கடைப்பிடிக்கப்பட்டால் வெற்றி பெறலாம்.

ஆனால் அரசு, கிரானைட் குவாரிக்கு அனுமதி தரும்போதே அரசியல்வாதி குறுக்கே புகுந்து, லஞ்ச லாவண்யங்களை ஆரம்பித்துவிடும்போது தொழில்- வர்த்தக அதிபர்கள் சற்று திணறித்தான் போகிறார்கள்!

- கி. ராஜேந்திரன்

படங்கள் : கிருஷ்ணன்பாலா



**அடுத்த இதழில்...**

- **ஹலோ சொல்லி அறுக்காதீங்க!** – கவர் ஸ்டோரி

# ச.ரி.க.ம.ப. சுவர்ணலதா!

**வீ**ட்டின் உள்ளே நுழைந்ததுமே ஒரு சோஃபாவை நிரப்பிக் கொண்டு பூங்கொத்துக்கள். எல்லாமே சுவர்ணலதா தேசிய விருது வாங்கியதைப் பாராட்டி வந்தவை. ஹால் ஷோ கேஸில் நெருக்கியடித்துக் கொண்டு கேடயங்கள், நினைவுப் பரிசுகள்; கீழே-தரையில் பொம்மை ரயில் அணி வகுப்பு மாதிரி மேலும் கேடயங்கள். சுவரில், ஜெயலலிதாவிடம் கலை மாமணி பெறும் சுவர்ணலதா... முதலில் அண்ணன்கள் வரவேற்கிறார்கள். அப்புறம் உள்ளறையின் திரைச்சீலை விலக்கி வருகிறார் பாவாடைச் சட்டையணிந்த..... சுவர்ணலதாவேதான்!

ரொம்ப ரொம்ப சிம்பிள்! போட்டோகிராஃபரைப் பார்த்த பிறகு சல்வாருக்கு மாறி மிக இலேசான



மேக் அப் போட்டுக் கொண்டு மீண்டும் வருகிறார்.

வழுக்கி ஓடும் குரலை சொடக்குப் போட்டு வேலை வாங்கக் கூடிய வல்லமை இவரிடமா...?

''குரல் எனக்கு God-given gift'' என்று ஒரே வரியில் பதில் சொல்லி விடுகிறார்.

''கலைக் குடும்பம் எங்களுடையது. அப்பா, அம்மா இரண்டு பேருமே நல்லா பாடுவாங்க. அக்கா சரோஜா கச்சேரிகள் பண்ணுவார்; அவர் கிட்டேதான் முறையா சங்கீதம் கத்துக் கிட்டேன்....''

பாலக்காடு பகுதியில் அத்திக்கோடு கிராமம் பூர்விகம். பத்து குழந்தைகளில் ஒருவர் சுவர்ணலதா. கர்நாடகாவுக்குக் குடிபெயர்ந்து மளிகை வியாபாரத்தில் ஈடுபட்டு... 1987இல் சுவர்ணலதாவைச் சென்னைக்கு அழைத்து வந்தார்கள்.

''சின்ன வயசிலிருந்தே எனக்கு சினிமாவுல பாடணும்னு ஆசை. எங்க குடும்பத்துலயும் அப்படியே ஆசைப் பட்டாங்க. இங்கே (மெட்ராஸ்) வந்ததும் எம்.எஸ்.வி. சாரைப் பார்க்கப் போனோம். அவர் ஒரு பாட்டு பாடிக் காண்பிக்கச் சொன்னாரு. நான் பாடினதைக் கேட்டதுமே 'வாய்ஸ்' நல்லாயிருக்கு, சினிமாவுக்கு ரொம்ப 'சூட்' ஆகும்னு சொன்னார். அப்புறம்தான் நீதிக்குத் தண்டனை படத்துல 'சின்னஞ்சிறு கிளியே' பாடறதுக்கு சான்ஸ் கொடுத்தார்.

"அதுக்குப் பிறகு உங்களுக்கு இரண்டாது வாய்ப்பு கிடைக்க ரொம்ப நாள் ஆயிற்று இல்லையா...?"

"ஆமாம்! ஒரு நீளமான இடைவெளி இருந்தது. 'சின்னதம்பி' படத்துல 'போவோமா ஊர்கோலம்' பாடின பிறகு தான் பெரிய 'break' கிடைச்சது."

இப்போது தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஹிந்தி, ஒரியா என்று பல மொழிகளிலும் பாடிக் கொண்டிருக்கிறார் சுவர்ணலதா. ஒரு சில நாட்களில் 15 பாடல்களைக் கூடப் பதிவு செய்ய வேண்டியிருக்குமாம். மொத்த ஸ்கோர் இரண்டாயிரத்தைத் தாண்டிவிட்டது!

"போறாளே பொன்னுத்தாயி" பாடினப்ப விருது வரும்னு நினைச்சீங்களா?"

"ரொம்ப ஈடுபாட்டோடத்தான் பாடினேன். பாடி முடிச்சதும் ரஹ்மான் சார் பாராட்டினார். வைரமுத்து சார், 'இந்தப் பாட்டு கட்டாயம் விருது வாங்கும்'னு சொன்னார். ஏனோ, அப்ப அதை நான் ரொம்ப சீரியஸா எடுக்கலை. இப்போ என் பொறுப்பு ரொம்ப அதிகமாயிடுச்சு. விருது அறிவிச்ச அன்னைக்கே ஏகப்பட்ட போன் கால்கள் வந்தன. எல்லாருமே போன்ல பாட்டின் முதல் இரண்டு வரியைப் பாடச் சொன்னாங்க... நானும் அலுக்காம பாடிக் காமிச்சேன்."

பாடல் வரிகளில் ஆபாசம் குறித்து எல்லா கலைஞர்களும் சொல்வதையேதான் சுவர்ணலதாவும் சொல்கிறார்:

"அந்த மாதிரி ஆபாச வார்த்தைகள் வரக் கூடாதுதான். ஆனால், நான் பாட மறுத்தா... வேற யாராவது பாடத்தான் போறாங்க...!"

"சரி, உங்களுக்கு ஆர்வமிருக்கிற மற்ற விஷயங்கள்...?"

"கிரிக்கெட் ரொம்பப் பிடிக்கும். மாட்ச் அன்னைக்கு ரிகார்டிங் இருந்தால் 'ஐயோ போகணுமே'ன்னு இருக்கும். இடையிடையில ஸ்டூடியோவிலிருந்து வீட்டுக்கு போன் பண்ணி ஸ்கோர் கேட்டுப்பேன்."

"இம்ரான்கான் கல்யாணம் பற்றி என்ன நினைக்கிறீங்க...?"

"எனக்குப் பிடிச்ச பிளேயர்ஸ் கபில், விவியன் ரிச்சர்ட்ஸ்..."

பட்டுக் கொள்ளாமல் பதில் சொல்கிறார்.

"சரி, உங்களுக்குப் பிடிச்ச பிளேபாக் சிங்கர்?"

"பாகவதர் - எம்.கே.தியாகராஜ பாகவதர்..."

-பாதுகாப்பு வளையத்துக்குள் புகுந்து கொள்கிறார் சுவர்ணலதா.

"இப்போ பாடறவங்கள்ல யார் பிடிக்கும்...?"

சற்று நேரம் படபடப்பான மௌனம். அப்புறம் யோசித்து உச்சரிக்கிறார்: "உண்ணி கிருஷ்ணன்..."

சினிமா உலகின் அனாவசிய சிடுக்குகளில் மாட்டிக் கொள்வது குறித்த பயம் இருபத்தோரு வயதுக் கலைஞருக்கு இருப்பது நியாயம்தானே.

"சரி, உங்களுக்கு பிராக்டிஸ் பண்ண நேரம்?" அவரை இயல்பு நிலைக்குக் கொண்டு வர முயல்கிறோம்.

"தினமும் காலையில் அஞ்சு மணியிலிருந்து எட்டு மணி வரைக்கும் பிராக்டிஸ்தான். அதை முடிச்சப் பிறகுதான் மற்ற வேலைகள். கர்நாடக இசையில்தான் பிராக்டிஸ் பண்ணுவேன்... அப்புறம் கஜல் கேட்கறதுக்கு ரொம்பப் பிடிக்கும். குலாம் அலி, மெஹ்தி ஹாசன்... எனக்கே கஜல் கச்சேரி செய்யணும்னு ஆசை..."

சொல்லிவிட்டு பீலூ ராகத்தை சுவர்ணலதா தமது சன்னக் குரலில் இழுத்துப் பாட, தேன் வந்து பாயுது நமது காதுகளில்.

- சீதா ரவி

மேலட்டை வண்ணப்படம், படம் : ஹரி.




—சீர்காழி வி. ரேவதி

# Kalki Shopping Page




1995 ஜூலை 2
யுவ ஆனி 18
மலர் : 53
இதழ் : 48

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.


## இதுக்குத்தாண்டா ஆளுனர்!

ஜெயலலிதாவுக்கு உள்ளது போல அபரிமித மெஜாரிட்டி இருந்துவிட்டால் எப்படி வேணுமானாலும் நடந்து கொள்ளலாம் என்றாகிவிடுகிறது. தட்டிக் கேட்டாலும், நீதி மன்றத்துக்குப் போனாலும், ஆளுனரிடம் முறையிட்டாலும், டில்லிக்குக் காவடி தூக்கினாலும் சமாளிக்கலாம். அதிலும் மத்திய ஆட்சிக்கே கணிசமான அளவில் பெரும்பான்மை பலம் இல்லாதபோது ஆட்சியில் நிலைப்பது சுலபமாகி விடுகிறது.

ஆனால் மெஜாரிட்டி பலம் இல்லாமல், கூட்டணி ஆட்சி என்று அமைந்த பிறகு ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்தும் அனுசரித்தும்தான் போக வேண்டும். இதில் தவறி விட்டதோடு, முலாயம் சிங் யாதவ் தம்மிச்சையாகவும் நடந்து கொள்ள முற்பட்டபோது அவரைக் கழற்றி விட்டுவிட்டு, பி.ஜே.பியுடன் கை கோத்துக் கொண்டது மாயாவதி - கன்ஷிராமின் ராஜ தந்திரம்.

'பி.ஜே.பி. உயர் ஜாதிக்காரர்களைத்தான் ஆதரிக்கும்' என்ற இமேஜை உடைத்தெறிய அந்தக் கட்சிக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. மாயாவதியை முதல்வராக்கி, வெளியிலிருந்தே ஆதரவு தருவதாக வாக்களித்து, தாழ்த்தப்பட்ட வகுப்பைச்




சேர்ந்த பெண்மணியை முதல்வராக்கிய பெருமையைத் தட்டிக் கொண்டது. முலாயம் சிங் யாதவ்வின் குண்டர்கள் ஆட்சிக்கு முடிவு கட்டியதாகவும் மார்தட்டிக் கொள்கிறது.

'ஆளுனர் எதற்கு?' என்று கேட்டவர்கள் உ.பி. சம்பவங்களைப் பார்த்த பிறகாவது ஆளுனரின் அவசியத்தைப் புரிந்து கொண்டிருந்தால் சரி. உ.பி. சட்டமன்றத் தலைவர் தனிராம் வர்மா, சமாஜவாடி கட்சி சார்பாகவே செயல்பட்டு, மற்ற அனைவரது கோபத்துக்கும் ஆளாகியிருந்தார். சட்டமன்றத்தைக் காலவரையறையின்றி ஒத்திவைக்கும் அவரது சூழ்ச்சி பலிக்காமல் போயிற்று. அவர் மீது நம்பிக்கை இல்லாத் தீர்மானம் நிறைவேறி, புதிய சட்டமன்றத் தலைவர் தேர்வாகி, மாயாவதியும் தமது மெஜாரிட்டியை நிரூபிக்க முடிந்தது. இதிலெல்லாம் ஆளுனர் மோதிலால் வோராவின் நடுநிலை நேர்மையும் தமது அதிகாரங்களைப் புரிந்து கொண்டு செயலாற்றிய திறமையும் பளிச்சிடுகின்றன. நாளை மாயாவதியும் அதிகார போதை தலைக்கேற நடந்து கொண்டால், பி.ஜே.பி. ஆதரவு வாபஸ் பெறப்பட்டு அவர் வீழ்ச்சி அடையலாம். ஆனால் இன்றைக்கு மெஜாரிட்டி ஆட்சியும் ஜனநாயகமும் நிலைக்க ஆளுனரின் ஆற்றலே உதவியுள்ளது.

## தட்டிக்கேட்க நாங்க இருக்கோம்!

'ஜெ. ஆட்சியைத் தட்டிக் கேட்க யாருமே இல்லையா?' என்ற விரக்தியும் சோர்வும் நிறைந்த கேள்விக்கு, 'இதோ நாங்கள் இருக்கிறோம்' என்று பதிலளிக்கும் விதமாக உயர்நீதிமன்ற நீதிபதிகள், ஒன்றன்பின் ஒன்றாகப் பல தீர்ப்புக்




களை வழங்கியுள்ளனர். இதில் கடைசியாக வக்கீல் சண்முகசுந்தரம் தாக்கப்பட்டது தொடர்பான வழக்கில் மாண்பமை நீதிபதி ஜகதீசன் தீர்ப்புக் கூறியுள்ளார். தனியார் மருத்துவமனையில் சண்முகசுந்தரத்துக்கு ஆகும் செலவுகளை அரசு ஈடு செய்ய வேண்டும் என்பதுடன், அரசு மருத்துவமனையில் அவருக்கு உரிய கவனிப்பு இராது என்ற அச்சம் நியாயமானதே என்றும் கருத்து தெரிவித்து உள்ளார். ஆதாரமாக, 'அம்மா மீதாடா வழக்குப் போடறே?' என்று சண்முகசுந்தரத்தைத் தாக்கியவர்கள் கேட்டிருப்பதைச் சுட்டிக் காட்டியுள்ளார். மேலும் தாக்குதலை ஓர் அமைச்சர் தூண்டியிருக்கலாம் என்று பலராலும் நம்பப்படுவதாலும் இன்னும் கைதாக வேண்டிய இருவர் பாக்கி இருப்பதாலும் அவர்கள் வாக்குமூலத்தைப் பெறுவதில் அரசின் தலையீடற்ற நியாயம் கிடைக்கும் என்று நம்புதற்கில்லை; எனவே, ஸி.பி.ஐ. விசாரணை தேவைதான் என்றும் தீர்ப்பளித்து ஸி.பி.ஐக்குப் பூரண ஒத்துழைப்பு தருமாறு தமிழக அரசுக்கு உத்தரவிட்டுள்ளார்.

இதனாலெல்லாம் தமது ஆட்சிக்குத் தலை குனிவு ஏற்பட்டுவிட்டதாக ஜெ. கருதப்போவது இல்லை என்றாலும், வழக்கறிஞர்களின் இத்தனை போராட்டங்களையும் இத்தகைய தீர்ப்புக்களையும் அவர் சுலபமாகத் தவிர்த்திருக்கலாம், 'வன்முறையில் எனக்கு நம்பிக்கை இல்லை; சண்முகசுந்தரத்தைத் தாக்கியவர்கள் தண்டிக்கப்படுவார்கள்' என்று கூறியிருந்தால்.

ஆனால் அப்படி அவர் சொல்லாததே நல்லதாயிற்று! நாடக வசனம் பேசி நாட்டை ஏமாற்றுவதை விட, மௌனத்தின் மூலம் உண்மை மன நிலையை உணர்த்துவதே மேல்!



திருமணம் சிறக்க
சீதன விருட்சம்
விபத்துக் காப்பீடு
ரூ. 1 லட்சம்
சொந்த நிலம்
யூனிட் விலை
ரூ. 3,000/-
ரூ. 1,50,000 பெறுமான
தேக்குப் பத்திரம்
6,12-வது ஆண்டில் மூன்று
மடங்கு பெருகிய வருமானம்
பின்தேதியிட்ட காசோலைகளாக
கலியுகத்தில் கற்பக விருட்சம்
GROWTH
ECOLOGY
SECURITY
மேலும் விபரங்களுக்கு
அணுகவும்:
மதர் எர்த் பிளாண்டேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்
(Incorporated under Companies Act of 1956) Regd. No. 18-29872
7-B, ஸ்பென்சர் பிளாசா (2-வது மாடி) 769, அண்ணா சாலை, சென்னை-600 002.
போன்: 8521417, 8520109, 8522701, 8522702. பேக்ஸ்: 044-8522148
மதர் எர்த் பிளாண்டேஷன்ஸ் திட்டத்தில் சேருவதற்கு
விரும்புகிறேன். அது பற்றிய வெளியீட்டை அனுப்பி வைக்கவும்
பெயர் :
முகவரி :
தொழில் :
தொலைபேசி: அலுவலகம் வீடு
YOGA-SAVITH

# பூஞ்சிறகு

**ரிஷபன்**



திரையரங்கின் சுவர் ஒட்டிய கடைசி இருக்கையில் நான். பக்கத்தில் புஷ்பா. வரிசையாய் இரு தம்பிகள். மணமான அக்கா, அவள் கணவன்.

"பாபு.. நீயும் வா."

அழைப்பை ஏற்று உடன் வந்தவனுக்கு புஷ்பா பக்கத்தில் அமர்வாள் என்ற எதிர்பார்ப்பு இல்லை.

எல்லோரும் திரையில் பிம்பங்களின் பொய் சோகத்தில் ஆழ்ந்திருந்தபோது, என் மீது மெத்தென்று விரல்கள் படிந்தன.

திடுக்கிட்டுத் திரும்பினேன். புஷ்பாவின் கவனமும் திரையில்தான். விரல்கள் மட்டும் சுதந்திரம் பெற்று என் கைவிரல்களுடன் கூட்டணி தேடின.

ஜுரம் வந்தபோது கூட இத்தனை நடுக்கம் வந்ததில்லை. தயக்கம், பயம், ஆசை என்று உணர்ச்சிக் கலவையின் மத்தியில் சுத்தமாய் படம் என்ன என்பதே புரிபடாமல் போனது.

இடைவேளை வெளிச்சத்தில் என்னைப் பார்த்துச் சிரித்தாள்.

இது முதல் பூஞ்சிறகு.

கைவிரல்களை மெல்ல நிதானித்துப் பிரித்து... காற்றில் பறக்காமல் நோட்டமிடும் சிறுவனாய்... நினைவுகளைப் பிரிக்கும் நான்.

ரயிலின் தடக்.. தடக்கில் கூடவே மனசும்.

ஆறு வருஷ இடைவெளிக்குப் பின் இதோ புஷ்பாவைத் தேடிப் போகிறேன்.

இன்னொரு பூஞ்சிறகு...

"டிபன் சாப்பிடறியா... பாபு?"

"எதுக்கு.. வேணாம்."

"சும்மா பிகு பண்ணாதே..."

தட்டில் கேசரி, பஜ்ஜி. நெய், விரல்களில் ஈஷிக் கொள்கிறது.

"இந்தா.. சீயக்காய்.. தேய்ச்சுக் கழுவு."

கைநீட்டி வாங்க முயன்றவனை விரல் பற்றி, தேய்த்துக் கழுவி... பளிச்சென்ற முத்தம் உள்ளங்கையில்.

"ஏ... என்ன"

"புஷ்பா..."

குரல் கேட்டுத் திரும்பிப் போகிறாள். போகுமுன் என்னிடம் கள்ளச் சிரிப்பு வீசி.

ரயில் நின்று சிக்னலுக்காகக் கூவுகிறது.

'ழே...'

மனசும்... 'புஷ்பா...'

அடுத்த பூஞ்சிறகின் ஸ்பரிசம்...



புதுப் புடவை. முகத்தில் பளிச். இன்று என்ன விசேஷம். சாக்லேட் எதற்கு...

"பிரிச்சு வாயிலதான் போடேன்."

பின்பக்க வராண்டாவின் தனிமையா... அது தந்த துணிச்சலா... போட்டதைப் பாதி கடித்துத் திருப்பித் தந்தவளை ஆச்சர்யமாய் பார்க்க.. சாக்லேட் இத்தனை தித்திக்குமா.

"சொல்லு... மெனி மோர் ஹேப்பி ரிடர்ன்ஸ்..."

ஓ பிறந்த நாளா.

விறுவிறுவென்று பேப்பர் எடுத்து எழுதினேன்...

சூரியக் கதிர்களில்
ஏன் இத்தனை மென்மை?
மரங்களில் ஏன் இன்று
மலர்க்கூட்டம்?
வண்ணத்துப்பூச்சிகள் கூட
புத்தம்புது நிறங்களில்?
வானவில்லும் தரையிலா?
இன்று புஷ்பித்தது யார்,
நீயா.. இல்லை...
என் மனசா?

எழுதிய கையைப் பற்றி இன்னொரு முறை உதடுகளின் ஒற்றல். நழுவி விடப் போகிறது என்று இன்னும் இறுக்கமாய் விரல்களை மூடிக்கொண்டு நான்.

தடக்... தடக்...

ஆறு வருஷம். அலைச்சல். கால்கள் தரையில் பதிய. எனக்கொரு அடையாளம். அங்கீகாரம் கிடைக்க. இன்று தலை நிமிர்ந்து பதில் சொல்ல முடிகிறது. புஷ்பாவைப் பெண் கேட்க இயலும். எதிரானியை பணத்தால் புரட்டிப் போட முடியும். பூஞ்சிறகுகளின் பலத்தில் நான்...



படியேறும் போது முரளி எதிரில் வருகிறான். அவள் தம்பி.

"வா... ரொம்ப நாளாச்சு... பார்த்து..."

புஷ்பாவின் அம்மா. முகம் களித்து... இனம் புரிந்து லேசாய் புன்னகையின் தீற்றல்.

அவள் எங்கே... பார்வை துழாவிக் கொண்டே இருக்கிறது.

"லெட்டரே போடலே. எங்கே இருக்கேன்னே தெரியலியே. அப்படி என்ன அழுத்தம். உங்கம்மா தெனம் அழுகைதான்."

மழுப்பலாய்ச் சிரித்தேன்.

"நீ வரப் போறேன்னு லெட்டர் வந்த பிறகுதான்.. அவ கண்ணுல உயிர் வந்தது.."

"சாதிச்சுட்டானே... அதைச் சொல்லு."

முரளியின் கைக்குள் என் கை சிறைப்பட்டு மீண்டது.

"வா.. உட்கார். ஏன் நின்னுண்டே இருக்கே. காப்பி கொண்டு வரேன்."

சோபாவில் சாய்ந்து உள்ளுக்குள் தவித்தேன். கேட்டு விடலாமா... புஷ்பா எங்கே...

பார்வை அலைபாய்ந்தது. எதிர்ச்சுவரில்... என்ன.. யாரது.. விலகிய பார்வை மீண்டும் புகைப்படத்தில் பதிய... உறைந்த புன்னகையுடன் புஷ்பா. கைக்குள் பூஞ்சிறகுகள் அதிர்ந்தன.

"என்னமோ ஜுரம்.... பத்து நாள் போராடி... ஆச்சு. ஒரு வருஷம்.. தேத்திக்கவே முடியலே... உனக்குத் தகவல் கூட சொல்ல முடியலே..."

புஷ்பாவின் அம்மா புத்தம்புதிதாய் அழுதாள். படத்தில் அசைவில்லை. இழப்பு நிஜம்தான்.

விஷயம் பாதித்த திகைப்பில் வெறித்தேன்.

யாரோ வலுக்கட்டாயமாய் விரல்களைப் பிரித்து... ஒவ்வொன்றாய்... பூஞ்சிறகுகள்... காற்றில் பறக்க ஆரம்பித்ததை... என்னால் தடுக்கவே முடியவில்லை அந்த நிமிஷம்.


STUDY AT HOME
NOW YOU CAN DECORATE YOUR HOME
THE WAY YOU LIKE IT
JOIN
INTERIOR DECORATION
CORRESPONDENCE COURSES
• Study in your own free time
• No minimum qualification needed
• Course fee payable in easy instalments
• No need to buy costly books
• Study material prepared by experts
• Choice of Hindi medium also
ADMISSION OPEN
Here in my town I have used my skills to decorate a shop with your course help. I am totally satisfied and I feel proud by the feed-back I am getting from the public.
— M.C. Ravi, (engineer) Karnataka
I enjoyed doing it. I thank you for it and hope that in future many students will be benefited by this course.
— Seema S. Chawla, Latur, Maharashtra
The Interior Decoration course has been very useful to know about interior decoration in detail. The lessons are very informative, short and to the point. Surely it'll help me a lot in my profession.
—J. Sukumar (b. arch.) Architect, Madurai
Fortunately, my sister bought a flat in a new building I got chance to suggest about kitchen counter to curtains. On the 'Grahparvesh' day every one praised the planning and decoration of the home. My sister pointed towards me for all the credit. I felt proud. But I offer all the credit to your Interior Decoration course and you. Thanking you once again.
— Shobha S. Shetty, Miraj
AID
For details send a self addressed envelope to
ACADEMY OF INTERIOR DECORATION
10A/14, SHAKTI NAGAR, DELHI-110 007
NEED WE SAY MORE


புதிய
ஜாதகபலன்
ஜோதிட
போஃன்
இந்த
வாரபலன்கள்
0011 222 222 0+
31 32 33 34 35 36
மேஷம் ரிஷபம் மிதுனம் கடகம் சிம்மம் கன்னி
37 38 39 40 41 42
துலாம் விருச்சிகம் தனுசு மகரம் கும்பம் மீனம்
001 122 221 1727
பொருத்தம்
0011 222 222 043
பட்சி சாஸ்திரம்
0011 222 222 025

13

"முள்ளு வாழைல பட்டாலும் வாழை முள்ளுல பட்டாலும் சேதம் வாழைக்குத்தான். நான் ஒண்ணும் புதுசா சொல்லலை. எல்லாருக்கும் தெரிஞ்சதுதான். தெரிஞ்சிருந்தும் நாம தப்பு பண்றோம். அதனாலதான் திருப்பித் திருப்பிச் சொல்றேன். அந்தாளை மலையிலேருந்து உருட்டிவிட்டுட்டீங்களாமே? தூக்கி விடாம, முள்ளம்பன்றிய பிடிக்கப் போயிட்டீங்களாமே? மதுரைல இருக்கிற அத்தினி உறவுக்காரங்ககிட்ட போய் உன்னைப் பத்தி தப்பாத்தான் சொல்றான். வெடி மருந்து வச்சிருக்கியாம். ரௌடிப்பட்டாளம் வச்சிருக்கியாம். நாப்பது ஏக்கரையும் முழுங்கிட்டு, செட்டியார் குடும்பத்துக்கு நாமம் போடத் தயாராயிட்டியாம்! ஏகப்பட்டப் பேச்சு."

"சொல்றதுக்கு வெக்கமாத்தான் இருக்குது. நீ மாடு மாதிரி இருக்கறதா நாலஞ்சு தடவை சொல்லிட்டாரு. நான் இருக்கறது தெரியாத, இஷ்டத்துக்கு பேசறார். உன்கிட்டேருந்து எஸ்டேட்டை மீட்காம போக மாட்





டேன்னு மேஜைல அடிச்சுப் பேசறார். வருஷத்துக்கு ஆறு லட்ச ருபா லாபம்னு கணக்கு போட்டுக் காட்டறார். அந்தாள சமாதானப்படுத்த முடியாதுன்னு எனக்குத் தெரியும். ஆனா சரியானபடி சாப்பாடு போட்டு அனுப்பியிருக்கலாம். என்னை விட முள்ளம்பன்றியாடா முக்கியம்னு கத்தறார். கதிரேசன் எங்க... கதிரேசன் எங்கன்னு அவங்க வீட்டுக்கு மூணு, நாலு தடவை போன் பண்ணிட்டாரு. ஆச்சி தெரியாதுன்னு சொல்லிட்டாப் போல இருக்கு. அதுக்கு வேற கூச்சல். நான் கெட்ட வார்த்தையெல்லாம் வுட்டுட்டு சொல்றேன்."

தகவல் தந்தவன் சொல்லச் சொல்ல, பகவதி பதில் சொல்லாது நீலநிற கோஸை சிறிய துணுக்காய் வெட்டிக் கொண்டிருந்தாள்.

வெளியே மழை பூமியைத் தாக்கிக் கொண்டிருந்தது. கதிரேசு தரையில் இருக்கிறானா மலைப்பாதையில் பாதியில் இருக்கிறானா தெரியவில்லை.

"சின்னம்மா..... நீலகோஸ் சூப் வையுங்க" என்று காலையிலேயே சொல்லிவிட்டான். தனியே காரில் இந்த மலைச்சரிவில் வருவதில் அபாயம் உண்டு. ஜீப் போல, கார் பிடிப்போடு ஏறாது. நின்னு நின்னு வரவேண்டியிருக்கும். கதிரேசு எங்கிருக்கிறது என்று தெரியவில்லை.

இந்த முறை கதிரேசு வந்தால் சாவியைக் கையில் கொடுத்து வாசலில் அதன் பெயரை எழுதச் சொல்லி யூனியன் ஆட்களுக்கும் வேலையாட்களுக்கும் மொத்த வியாபாரிகளுக்கும் அறிமுகப்படுத்தி விட்டு பெட்டியோடு வெளியே கிளம்பி விட வேண்டும். சொர்ணலட்சுமியை அனுப்புவதாக ஒரு கடிதம் நேற்று வந்தது. எப்போது, யாரோடு என்று எழுதப்படவில்லை. சொர்ணலட்சுமி சின்ன வயசிலேயே லட்சணமாக இருப்பாள். கதிரேசு வரும் நேரத்தில் சொர்ணலட்சுமியை உதவிக்கு வைத்துக் கொள்வது சரியாக வருமா... இல்லை இன்னும் கெட்ட பெயர் வருமா....

"அதான பார்த்தேன்! நாகர்கோயில்காரி மதர்த்தலா ஒரு பொண்ணை சமையலுக்குக் கொண்டாந்து வச்சிருக்காளாமே.... கதிரேசு... சாப்பாடு நல்லா இருக்கா... கறி கூடுதலா இருக்காம்ல, சாப்பாட்டுல...."

மதுரையில் கேலி வரும். சொர்ணலட்சுமி வந்தால் வைத்துக் கொள்வதா... திருப்பி அனுப்புவதா?

இதுவரை வாழ்க்கை சௌகர்யமாய் இருந்தது. உறவான முறையில் ஒரு மாற்று குறைவாக இருந்தாலும் உயர்வான மனிதர்களுக்கு உண்மையாக இருந்ததில் வாழ்க்கை அர்த்தமுள்ளதாக இருந்தது. இன்னும் பத்து வருடம் செட்டியார் உயிருடன் இருந்திருக்கலாம். தனக்கு கிழத்தனம் வரும் வரையில் தனக்கு புருஷனாய்

பாலகுமாரன்

# என்னுயிர் நீதானே

இருந்திருக்கலாம். இந்த இளமை ஒரு வேதனை. என்னிடம் என் இளமை வாலாட்டவில்லை. வேறு எவர் கண்ணையோ குத்தி வம்புக்கு இழுக்கிறது. எகத்தாளமாய்ப் பேச வைக்கிறது. இப்படி பேச்சு கேட்கிற போதுதான் நெஞ்சில் பள்ளம் விழுந்தது போல் ஒரு வேதனையும், 'ஐயோ புருஷன் இல்லையே' என்கிற ஏக்கமும் ஏற்படுகின்றன. இந்த ஏக்கத்தை யாரிடமும் சொல்ல முடியாது. இத்தனை வேதனையிலும் ஒரே ஒரு சமாதானம். ஆச்சியின் அன்பும் கதிரேசனின் பாசமும்தான்.

மழை நிற்குமா? வானம் தெளியுமா? மழைக்கு மீறி தொலைவே கார் வரும் ஓசை கேட்டது.

"அட... நம்ம செட்டியார் காரு..." மதுரை பற்றி தகவல் சொன்னவன் துள்ளி எழ, "குடை... குடை... இந்தா குடை" அவனுக்கு மேல் பரபரத்து பகவதி குடையை நீட்டினாள்.

அவன் விரித்த குடையோடு மழையில் இறங்கினான். எஸ்டேட் கட்டடத்திற்கு வருவதற்குள் அந்தக் கார் ஒரு செங்குத்தான பாதையைக் கடந்தாக வேண்டும். மழை நாட்களில் அந்த செங்குத்தான பாதை சேற்றுக் குழம்பாகி விடக்கூடாது என்பதற்காக உருளை உருளையான பாறைக் கற்களைப் போட்டு, கெட்டிப் படுத்தப்பட்டிருந்தது. மழையில் மண் கரைந்து வேறுபுறம் போக, இப்போது உருளைப் பாறையில் கார்வர வேண்டியதாயிற்று. குலுங்கிக் குலுங்கி கார் மேலேற, அவன் குடையோடு பாறை நோக்கிப் போனான்.

இன்னும் முப்பது கஜ தூரத்தில் கார் வீட்டை அடைந்து விடும். கதிரேசன் ஆக்ஸிலேட்டரிலிருந்து கால் எடுக்காமல் மூன்றாவது கியரில் மிகுந்த வலிவோடு என்ஜின் ஓட, வண்டியைக் கவனமாய் ஓட்டிக் கொண்டிருந்தான். அந்த முப்பது கஜ தூர சரிவுக்கு முன்னால் வண்டியை நிறுத்த முடியாது. வேகம் குறைக்க முடியாது. ஆனால் எதிரே ஒரு மடையன் குடையோடு வருகிறான். யாரது என்று தெரியவில்லையே. கதிரேசன் ஹார்ன் அடித்தான். உள்ளிருந்த படியே 'முட்டாள்' என்று கத்தினான்.

சொர்ணலட்சுமி கார் கண்ணாடிக் கதவை இறக்கி கையை வெளியே நீட்டி ஓரம் போ என்று கத்தினாள். அருகே வரும் போது தெரிந்து விட்டது. அது விநாயகம்.

ஏலம் க்யூரிங் செய்கிற விநாயகம். மதுரைக்கும் எஸ்டேட்டுக்கும் வாரத்துக்கு மூணு முறையாவது போவது அவன் வழக்கம். தரையிலிருப்பவர்கள் மலைக்கு வருவது இல்லை. மலையிலிருக்கிறவர்கள் தரைக்குப் போகமாட்டார்கள். விநாயகம் இரண்டு பக்கமும் நேசமில்லாமல் இருந்தான். எப்போதும் பயணப்படுவதிலேயே ஆர்வம் காட்டிக் கொண்டிருந்தான்.

"மகனே... உன்னை இடிச்சு சாவடிச்சுடப் போறேன்" வண்டி வேகத்தை கதிரேசன் குறைக்கவேயில்லை. வண்டி வெகு அருகே வந்து விநாயகம் துள்ளி விலகிய போது வண்டிக்குள் சொர்ணலட்சுமி உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான்.

"அறிவிருக்கா உனக்கு... வண்டி வர்றது தெரியலை..." அவன் செத்துப் போய் விடுவானோ என்கிற பதட்டத்தில், தப்பித்து விட்டான் என்கிற நிம்மதியில் தனக்கு வந்த கோபத்தை வசை மொழியாக மாற்றினாள். விநாயகம் திகைப்புற்றவனாக வண்டியையே பார்த்துக் கொண்டிருந்தான். அந்தப் பெண் பஸ்ஸில் வந்தவள் என்பது ஞாபகம் வந்தது. செட்டியார் வண்டியில் சட்டமாய் உட்கார்ந்து இருபத்தேழு வருஷம் வேலை செய்த தன்னை அவள் கை வீசிப் பேசியது பிடிக்கவில்லை. எஸ்டேட்டில் கால் பதிக்கு முன் சொர்ணலட்சுமி ஒரு விரோதத்தை சம்பாதித்துக் கொண்டாள்.

விநாயகம் குடையோடு கதிரேசனை நோக்கி ஓடினான். பெண்ணால் பள்ளத்தில் சறுக்கி விடப்பட்டபோது வராத கோபம் ஒரு வயசாளி, பிடிப்பில்லாதவன் மேலேறும் காரை விவரமில்லாமல் மடக்கியபோது அதிகமாய் வந்தது. முதல் முதலாய் எஸ்டேட் பொறுப்பை ஏற்கலாம் என்று வருகிற போது இடறுவது போல் ஒரு பைத்தியக்காரன் வந்து விட்டான். நல்லவேளை இடறவில்லை. இடறியிருந்தால் அச்சானியமாய் இருந்திருக்கும். சொர்ணலட்சுமி விரட்டி விட்டாள். கதிரேசனுக்கு சொர்ணலட்சுமியிடம் சிறிதான நன்றியும் விநாயகத்தின் மீது பெரிதான கோபமும் ஏற்பட்டன.

"நான்தான் சொன்னேனே. இது ரொம்பப் புராதனமான கோயில்னு!"

— டி.என். பாலகிருஷ்ணன்



"ஐயா... குடை..... ஐயா... குடை" முற்றிலும் நனைந்து போய் சேறாய் இருந்த கதிரேசனுக்கு விநாயகம் குடை நீட்டினான்.

அந்தக் குடையை கதிரேசன் பிடுங்கினான். வீசி சரிவில் எறிந்தான்.

"சொர்ணலட்சுமி, வா."

அவளோடு எஸ்டேட் கட்டடத்திற்குள் நுழைந்தான்.

இரண்டு பெரிய டர்க்கி டவல்களோடு பகவதி வராண்டாவுக்கு வந்தாள். அவர்களிடம் நீட்டினாள். வா... வா.. என்று இரண்டு பேரையும் கூப்பிட்டாள். ஏலக்காய் போட்டு வைக்கும் கோணிகளைத் தரையில் பரப்பி கதிரேசனை அறைக்குள் அனுப்பினாள். நாச்சியப்பச் செட்டியாரின் வேட்டியும், மடித்த மேல் அங்கவஸ்திரத்தையும் கட்டிலில் வைத்து அறைக் கதவை சார்த்தினாள். சொர்ணலட்சுமியிடம் ஓடி வந்தாள்.

"இத்தினி மழையா இருக்கே. எங்க மாட்டினியோ... எப்படி வருவியோன்னு கவலைப்பட்டுக்கிட்டே இருந்தேன்டி. கதிரேச வண்டிலயே நல்லபடியா வந்துட்ட."

சொர்ணலட்சுமிக்கு இளமையும் பூரிப்புமாய் இருந்த இருபது வயது பகவதி ஞாபகத்துக்கு வந்தாள்.

ஆனால் இப்போது இந்த முகத்தில் அந்த சுவடே இல்லை. வாழ்க்கை துக்கத்தில் அடிபட்டு கன்றி கறுத்துப் போன முகம் தான் இருந்தது.

"பகவதி அக்கா..." ஏக்கத்தோடு சொர்ணலட்சுமி கை நீட்டினாள். அவர்கள் அணைத்துக் கொண்டார்கள். பகவதியின் கழுத்தை, தோளை, முதுகை, இடுப்பை சொர்ணலட்சுமி வருடிக் கொடுத்தாள். இத்தனையும் வீணா என்கிற துக்கம் அதில் இருந்தது. பகவதி முகம் திருப்பிக் கொண்டாள். 'வீணா போனா போட்டும் போடி' என்கிற அலுப்பு அந்த முகம் திருப்பலில் இருந்தது. பகவதியின் கையை எடுத்து தன் மடியில் சொர்ணலட்சுமி வைத்துக் கொண்டாள். இடது கையை அவள் உடம்பில் சுற்றிப் போட்டு கன்னத்தில் முத்தமிட்டாள்.

பேசாது தங்களைப் பெண்கள் பரிமாறிக் கொள்கையில் வேட்டியும் வெறும் மாருமாய் கதிரேசன் வந்து நின்றான்.

"எனக்கு பசிக்குதும்மா' என்று சொன்ன படியே தலை துவட்டினான்.

"மறந்தே போனேம்பார்" பகவதி சொர்ணலட்சுமியை உதறிவிட்டு ஓடினாள். சற்று முன் பகவதியிடம் காட்டிய ஆதரவை மறந்து விட்டு, கதிரேசன் என்கிற ஆணின் ரோமம் அடர்ந்த மார்பை சொர்ணலட்சுமி பார்க்கத் துவங்கினாள்.



"நீ பூரட்டு ஓடாமே ஏன் அங்கேயே நின்னு மாட்டிக் கிட்டே?"

"யாருமே 'திருடன் திருடன்'னு கத்தலே; அதனாலே எனக்குத் தப்பிக்க ஓட மூடு வரலே!"

— ராஜுபாபு

"அம்மா... சொர்ணலட்சுமிக்கும் அப்படியே சாப்பாடு வைங்க. அதுவும் வழியெல்லாம் பசி பசின்னு சொல்லிட்டு வந்துச்சு. ஏன் தரைல உக்காந்துட்டு... இங்க உக்காரு."

சொர்ணலட்சுமிக்கு நாற்காலியைக் காட்டினான். குடையோடு வாசலில் நின்ற விநாயகத்துக்கு இந்த உபசரிப்பு பிடிக்கவில்லை.

'அடுத்தவாட்டி மதுரை போனா சொல்லிடணும். அந்த நாகர்கோயில்காரி ஒரு சொந்தக்காரக்குட்டிய இட்டாந்துட்டா. தனக்குத் துணையா வேணும்னு கதிரேசனுக்கு இணையா ஒரு பார்ட்டி கொண்ணாந்துட்டா. இனி எஸ்டேட் வுட்டு யார் சொன்னாலும் கதிரேச அசையமாட்டான். கதிரேச பேரைச் சொல்லி அவளுங்க வன்னமா துன்னுவாளுங்க. செட்டியார் சொத்து அந்தக் குடும்பத்துக்குத்தான்... பரம்பரை பரம்பரையா நம்ம வளமுறை இப்படித்தான். நீங்க மதுரைல உக்காந்து கத்திக்கிட்டு கிடங்க என்று கோள்மூட்டி விட வேண்டும்.'

'இத்தோடு இன்னொன்றும் சொல்ல வேண்டும். இந்தவாட்டி பிற்பகல் நல்ல மழை. முற்பகல் நல்ல வெயில். ஒரு வள்ளிக் கொடில நாப்பது பழம் நிக்கும். ஒரு செடில உள்ளங்கை காய் எடுக்க முடியும். நம்ம எஸ்டேட்ல ஒரு வாரத்துக்கு நானூறு கிலோ கலபமா அறுக்கலாம். ஏலக்கா முன்ன மாதிரி இல்லீங்க. பட்டணத்துல ஒரு ரூபாய்க்கு நாலு ஏலக்கா தரான். தங்கப் புதையல மண்ணுல வுட்டுப்போட்டு மதுரைல கள்ளழகர் ஊர்வலம் பாத்துக்கிட்டிருக்கீங்க. நல்லாவா இருக்கு.. தூண்டி விட வேண்டும்."

விநாயகம் பொருமினான்.

இது ஒரு புத்தி. எப்போதும் எதையும் கடித்துக் குதறிக் கொண்டிருக்கிற புத்தி. இடையறாது கடித்துக் குதற, வாய் ஊறல் போல ஒரு மன ஊறல் இவர்களுக்கு இருக்கும். இப்படிப்பட்டவர்களை சந்தித்துத்தான் ஆக வேண்டும்.

(தொடரும்)

**நா**சருக்கு - இயக்குநராக இது முதல் படம். புதிய களனில், மாறுபட்ட விளைச்சலுக்கு வெகு உழைத்திருக்கிறார்.

பழிவாங்கும் கதை என்று ஒரு வரியில் சொல்லிப்போய் விடுவது நியாயமில்லை. உயிரும் உணர்ச்சியுமாக தெருக்கூத்துக் கலைஞர்களின் வாழ்வை, ஏழ்மையை, யதார்த்தத்தோடு மல்லுக்கு நிற்கும் சோற்றுக்கு உதவாத கலையை - அதன் இயல்போடு வெளிப்படுத்தியிருக்கும் நேர்த்தி மிகப் புதிது.

கூத்தில் பெண் வேடம் போடுகிறவனுக்கு யாரும் பெண் கொடுக்க முன்வருகிறதில்லை. ("உனக்கெதுக்குடா பொண்ணு? நல்ல ஆம்பளையா பாரு!")

பாட்டு வாத்தியார் ஆர்மோனியத்தை, மனைவி போட்டு உடைக்கிறார்.



# அவதாரம்

முன்னூறு வருஷங்களாக வளர்ந்த கலை, மூன்று நிமிஷக் காட்சியில் கடைத்தேற்ற ஆளில்லாமல் அநாதை ஆகிறது. சரவெடி வசனங்களில், நாசர் புதிய பரிமாணம் காட்டுகிறார்.

துச்சாதன வேடம் கட்டும் வில்லனுக்கு 'சரக்கு' வாங்கிக் கொடுத்து, அப்பா, நாயே என்று காலில் விழுந்து, ஆசிரியர் மகளை 'ரெக்கமண்டு' பண்ணச் சொல்லி ஒருவழியாக ஹீரோவுக்கு வேஷம் கிடைக்கிற வேளையில் குழு சிதறிப் போவதும், விரக்தியும் வெறியும் மேலோங்க மெட்ராஸுக்கு (வேறென்ன, சினிமா!) வண்டி ஏறுவதுமான இடைவேளைக்கு முந்தைய காட்சிகளில் அத்தனை இறுக்கம், இயல்பு. இதற்குப் பெரிதும் உதவியிருப்பது கூத்துக் குழு-உறுப்பினர்களாய் வரும் கதா

## தேடிப் பிடித்த வில்லன்

**பா**லாசிங்கைப் படத்தில் பார்த்தால் உதிரிப்பூக்கள் விஜயன் ஞாபகம் வருகிறது. உணர்ச்சிகளை வெகுவாக அடக்கி, கண் அசைவிலும் சின்ன சிரிப்பிலுமாகக் காட்டுகிற வில்லத்தனம் பிரமாதமாயிருக்கிறது. படத்தில் அந்த கொலுசை வைத்துக் கொண்டு (இரண்டே காட்சிகள்!) வசனமே இல்லாத அந்த உக்கிர சிரிப்பு முதுகுத் தண்டு சில்லிட வைக்கிறது!

பாலாசிங்குக்கு 'அவதாரம்' முதல் படமல்ல. அவன் அப்படித்தான், கவிதை பாட நேரமில்லை இன்னும் சில மலையாளப் படங்களில் நடித்திருக்கிறார். ஞானியின் 'பரீக்ஷா' நாடகக் குழுவின் நீண்ட நாள் நடிகர். இந்திரா பார்த்தசாரதியின் 'ஔரங்கசீப்', பாதல் சர்க்காரின் 'தேடுங்கள்' உள்ளிட்ட சில நாடகங்கள் இவருக்



அளித்தாலும் அதையும் வித்தியாசமாய்ச் சொல்ல முயன்றிருப்பது தெளிவு.

கண் தெரியாத ரேவதியை வைத்துக் கொண்டு மெட்ராஸில் நாசர் அட்ரஸ் தேடுகிற அவஸ்தை யாரையும் உருக்கும். திடீரென்று திரையில் நுழைகிற ஸ்ரீவித்யாவுக்கு நாசர் விதவிதமாக நடித்துக் காட்டுகிற இடத்தில் மென்மையான ஹ்யூமர் தெரிகிறது.



பாத்திரங்களின் நடிப்பு.

பின்னால் ஏற்படும் சாதா திருப்பங்களும் வழக்கமான சினிமாத்தனமும் ஏமாற்றம் (க்ளைமேக்ஸின் உக்கிரம் தாங்குவதற்காக?)

க்ளைமேக்ஸ் காட்சியில் பரிசோதனை முயற்சியாக 'நரசிம்ம அவதாரம்' ரசிக்கக் கூடிய யுக்தி என்றாலும் ஒட்டாமல் தனித்து நிற்கிறது.

நிறைய சொல்ல ஆசைப்பட்டு தடுமாறியிருப்பது புரிகிறது.

படத்தில் இளையராஜாவின் பங்கு மிக அதிகம். பாடல்களிலும் ரீ-ரெக்கார்டிங்கிலும் பழைய தரத்தை மீண்டும் எட்டிப் பிடித்திருக்கிறார். பாடல்களைக் காட்சியாக்கும் போது துளியும் கெடுக்காதது இயக்குனர் நாசர் பெருமைப்பட வேண்டிய விஷயம்.

கற்பழிப்பு நீரோட்டம் கதையில் இருந்தாலும் விரசம் இன்றிச் செய்திருப்பது மேலும் பெருமை.

கொட்டை போட்ட டைரக்டர்களையெல்லாம் தூக்கிச் சாப்பிட்டிருக்கிறார் நாசர்.

— ஆர்.பி.ஆர்.

குப் பெயர் வாங்கிக் கொடுத்தவை.

நாகர்கோவில்காரர். பேச்சில் அச்சு அசல் வட்டார வாசனை. எளிமை. நகைச்சுவை. நிஜத்தில் ரொம்ப சாதுவாக, சாஃப்ட் ஆக இருக்கிறார்.

சரியான சினிமா வாய்ப்புக்காகப் பல வருஷங்கள் காத்திருந்து, போரடித்து ஊருக்கே திரும்பிப் போனவரை நாசர்தான் நேரில் போய் இழுத்து வந்திருக்கிறார்.

"என் நடிப்பில் அவருக்கு அத்தனை நம்பிக்கை!" என்று பெருமையாகச் சொல்கிறார்.

நம்பிக்கை பொய்க்காதது படத்தில் தெரிகிறது!

– பா.ரா.

# அவதாரம் தந்த பாடம்!

**- நாசர் பேட்டி**

மிகத் தரமான படமாக முதல் பாதி வரை முகம் காட்டிவிட்டு, பின்னால் ஹீரோவின் கொலை, கோர்ட், வக்கீல், பழி வாங்கும் படலம் என்று சாதாரணமாகி விட்டது ஏன்? வியாபாரத் தேவைகளா? காலத்தின் (!) கட்டாயமா? ஸ்கிரிப்டே அப்படித்தானா? நாசரிடம் கேட்டோம்.

"படம் முழுக்க முடிஞ்சி, வெட்டி ஒட்டறதெல்லாம் ஆனப்புறம் என் உதவியாளர்களிடம் சத்தம் போட்டேன். டைட்டில் கார்டுல 'டைரக்ஷன்'னு என் பேரு போடாதீங்கய்யான்னு."

நாசரின் மெழுகு முகத்தில் அசாத்திய சோகம். துக்கம். கவலை வரிகள்.

"சினிமாவுல அல்ட்டிமேட் அச்சீவ்மெண்ட்டுன்னா அது டைரக்ஷன்தான் சார்! இங்க லைட் பாயிலிருந்து ஃபைனான்ஸ் பண்றவங்க வரைக்கும் எல்லாருக்கும் டைரக்ஷன் ஆசை உண்டு. எனக்கும் அந்த வகையில நிறையவே ஆசை இருந்தது. ரெண்டு மூணு நல்ல கதைகள் வெச்சிருந்தேன். ப்ரொட்யூசர்களிடம் சொன்னபோது, 'இதெல்லாம் பத்து, பன்னெண்டு வருஷம் கழிச்சி எடுக்க வேண்டிய சப்ஜெக்டு. ஓடறா



மாதிரி ரிவெஞ்ச் சப்ஜெக்டா சொல்லுங்க. அதுக்குத்தான் இப்ப மார்க்கெட்டு'ன்னாங்க.

"வேற வழி? ஒத்துக்கறேன். 'அவதாரம்' ரிவெஞ்ச் சப்ஜெக்ட்தான். ஆனா முழுக்க வித்தியாசமா சொல்ல முயற்சி பண்ணியிருப்பேன். தெருக்கூத்துங்கறது ரொம்ப பழைய கலை. இன்னும் ஒருசில இடங்கள்ல உசிரோட இருக்கற கலை. நமக்கு நல்லா தெரிஞ்ச விஷயம். ஏன் அதைப் பின்னணியா எடுத்துக்கக் கூடாதுன்னு தோணிச்சி.

"ஒரு வருஷம் உழைச்சேன். தெருக்கூத்துக் கலைஞர்களையெல்லாம் நேர்ல சந்திச்சி, அவங்க கூடவே இருந்து பார்த்தேன். அவங்க வாழ்க்கை முறையை 'அப்ஸர்வ்' பண்ணினேன். ஸ்கிரிப்ட் எழுத மட்டும் நாலு மாசம் ஆச்சு.

"இதே பழிவாங்கற கதையை போலீஸ்காரங்களையோ, அரசியல்வாதியையோ வெச்சிக் கூட பண்ணியிருக்கலாம். ஏன் பண்ணலை? என்ன செய்ய முடியுமோ, அதைத் தரமா செய்யணும்னு நினைச்சேன்.

"ஆனா என்ன பிரயோஜனம்? கதை பழசுதான். களம்தான் புதுசு. அதுக்கே டிஸ்ட்ரிப்யூட்டர்கள் வாங்க மாட்டேன்னுட்டாங்க. ஆர்ட் பிலிம் மாதிரி இருக்குன்னுட்டாங்க. பாட்டு, பழிவாங்கல், சண்டை, கனவு சீன் எல்லாமும்தான் இருக்கு. என்ன, கொஞ்சம் தரமா இருக்கு. இதுக்கே இந்த கதின்னா இங்க நல்ல படங்கள் எப்படி சார் வரும்?

"அவங்க படம் பார்த்துட்டு, 'இந்த சீன் தொய்வு', 'இன்னொரு சீன் வேணாம்'னு சொல்லச் சொல்ல, 'ஒருவேளை இதை எடுத்தா வாங்குவாங்களோ, அதை மாத்தினா வாங்குவாங்களோ'ன்னு அவங்க சொன்னதையெல்லாம் வெட்டினேன். அதனாலதான் சில இடங்களில் 'லிங்க்' விடுபட்டு நீங்க சொல்ற குறைகள் படத்துல இருக்கு.

"அப்படியும் யாரும் வாங்கலை. தமிழ்நாடு முழுக்க ப்ரொட்யூசர் தைரியமா சொந்தமாத்தான் ரிலீஸ் பண்ணியிருக்காரு. கோடிக்கணக்குல பணம் போடும்போது கொஞ்சமாவது லாபம் வேணாமா சார்? அதுக்காக நான் ஒண்ணும் முழுக்க முழுக்க காம்ப்ரமைஸ் பண்ணிக்கலையே! படம் இப்பவும் நல்லாருக்குன்னு தானே சொல்றீங்க?

தன் ஒரிஜினல் ஸ்கிரிப்டைக் கொண்டு வந்து காட்டுகிறார் நாசர்.

"படத்துல ரேவதி கூடை முடையற வேலை செய்வாங்க. கண்ணு தெரியாவிட்டாலும் சுயமா உழைக்கணும்னு காட்டற



# வெட்டப்பட்ட ஒரு காட்சி....

(கண் தெரியாத பொன்னம்மாவுக்கு (ரேவதி) குப்புசாமி (நாசர்) வண்ணங்கள் பற்றி விளக்கும் - படத்தில் நீக்கப்பட்ட - ஒரு காட்சி. நாசரின் ஒரிஜினல் ஸ்கிரிப்டி லிருந்து)

இடம் : மலைக்கோவில் - பகல்.

மலைக்கோவிலில் குப்புசாமியும் பொன்னம் மாவும் அமர்ந்திருக்கிறார்கள்.

பொன் : நெறமுன்னா எப்படி இருக்கும் குப்புசாமி?

குப்பு : (சற்று குழம்பி) அது.. அது நெறமுன்னா கலர் கலராத்தான் இருக்கும்.

பொன் : (புரியாதவளாய்)... ம்...

குப்பு : யார் மேலயாவது பாசமிருக்கா?

பொன் : அப்பா மேல

குப்பு : ' ஏக்கம்..

பொன் : அம்மா மேல...

குப்பு : கோபம்...

பொன் : பாதி மேல...

குப்பு : ஆசை....

பொன் : (சற்று நாணி) இருக்கு...

குப்பு : சரி கண்ணை மூடிக்க....

பொன் : நான் எதுக்கு கண்ணை...

குப்பு : ஐயோ அது அப்படித்தான். கண்ணை மூடு...

பொன் : ம்...

குப்பு : சரி.. இப்ப நா ஒவ்வொரு உணர்ச் சியா சொல்லிட்டு வர்றேன்... உணர்ச்சியோட உச்சிக் குப் போகும் போது நீயா ஒரு நெறத்தை நெனைச் சுக்க. அதுதான் அந்த நெறம்... சரியா?

பொன் : சரி

(தொடர்ந்து 'தென்றல் வந்து தீண்டும் போது என்ன வண்ணமோ' பாடல் வருகிறது.)

மாதிரி கேரக்டர். இதெதுக்கு வேஸ்டுன்னுட் டாங்க! விளைவு? அதோட சம்பந்தப்பட்ட பல விஷயங்கள் நீங்கிடிச்சி!

"இன்னொண்ணு... 'கலர்'னா என்னன்னு ரேவதி கேட்க, நான் விளக்கற மாதிரி ஒரு சீன். அதனோட தொடர்ச்சிதான் 'என்ன வண்ணமோ' பாட்டு.

'ஐயே, இதென்ன கலர் பத்தி இவ்னோ பேசறாங்க, அநாவசியமா? தூக்கிடுங்க'ன் னாங்க. ஸோ, அந்தப் பாட்டு தனியா தெரி யறதும் அதனாலதான்!

"இதெல்லாம் மீறியும் படம் நல்லா இருக் குன்னுதான் சொல்றாங்க."

"இத்தனை மோசமான அனுபவங்களை வைத்துக் கொண்டு இன்னொரு படம் இயக் கும் ஐடியா இருக்கிறதா?"

"நிச்சயம் இயக்குவேன். இன்னும் கொஞ் சம் புத்திசாலித்தனத்தோடு அடுத்த வருஷம், அடுத்த படம் நிச்சயம்!"

"புத்திசாலித்தனமென்றால் டிஸ்ட்ரிப் யூட்டர்கள் விரும்புகிற மாதிரியா?"

"தரத்தைப் பொறுத்தவரை நிச்சயம் தாழாது. அது உறுதி."

— துளசி

# ஒருகுளிக்குக்கம்

**வா**சலில் ஏதோ ஓசை கேட்டது. இப்போதெல்லாம் சின்ன சப்தத்திற்கும் மனசு திடுக்கிட்டுப் போகிறது. புத்தகம் படித்துக் கொண்டிருந்த ஜோதி சடாரென்று கதவு திறந்து பார்க்க, அணில் ஒன்று கிரீச், கிரீச் என்று கத்தியபடி ஓடியது. புன்னகை ஒன்று அவள் முகத்தில் தவழ்ந்து பரவியது.

மறுபடியும் கதவைச் சார்த்த முற்படுகையில் எண்ணெய் காணாத கதவு லேசாய் சப்தப் படுத்தியது. இதற்கு எண்ணெய் போட்டாக வேண்டும். நாளை காலையில் சந்துரு வருவதற்குள் இதைச் செய்து முடித்தாக வேண்டும்.

முனை மடக்கி வைத்திருந்த தி. ஜானகிராமனின் கதைப் புத்தகத்துடன் பின்பக்கம் போய் அமர்ந்து கொண்டாள். காற்று வேப்ப இலையின் வாசத்துடன் சுகந்தமாய் வீசியது. சொட்டென்று ஒரு வேப்பம்பழம் தலையில் வந்து விழ, ஜோதி அண்ணாந்து பார்த்தாள்.

ஒரு மாதம் முன்பு இந்த வேப்பமரம் இலைகள், பூக்கள் எதுவும் இல்லாமல் வெறும் மொட்டையாய் குழந்தையைத் தொலைத்து விட்ட அம்மாவைப் போல் பரிதாபமாய் நின்று கொண்டிருந்தது. அதற்குள் கொழுந்து, கொழுந்தாய் இலைகளும் பூக்களும் பழமுமாய்... எப்படி முடியும் இது? பிரமிப்பாய் இருந்தது.

வாசல் கதவை யாரோ தட்டும் சப்தம் கேட்க, விரைந்தாள்.

"பூம்மா"

பூக்காரி பூ கொடுக்க, வாங்கிக் கொள்கையில் சொன்னாள் : "நாளைக்கு ஒரு முழம் பூ கூடுதலா வேண்டும்மா!" சொல்கையிலேயே புன்னகை வந்தது. நாளை இத்தனை நாழி சந்துரு இங்கே இருப்பான் என்ற நினைப்பே ரம்யமாய் இருந்தது. நாளை சந்துரு வந்தால் எந்த வேலையுமே இல்லாமல் பேசிக் கொண்டிருக்க வேண்டும். இந்தப் பத்து நாள் கதையையும் மெதுவாய் நிதானமாய்ச் சொல்ல வேண்டும்.

சந்துரு அதிகம் பேசாது 'உம்' போட்டுக் கேட்டுக் கொண்டே இருக்கும். இப்போது தான் மனசு இப்படி பேசுவதற்கு அலையாய் அலையும். அவன் இருக்கும் தருணங்களில் எதுவுமே பேசாமல், பேச்சு வராமல் கைகளைக் கோத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கத்தான் பிடிக்கும். அவன் இருக்கும் நேரங்களை அப்படியே கைக்குள் இறுக்கிப் பிடித்து வைத்துக் கொள்ள வேண்டும் போல் வெறி பிறக்கும்.

**ஜோ**தி உள்ளே போய் தட்டில் தயிர் சாதம், ஊறுகாய் போட்டு எடுத்து வந்தாள். ஒரு கடமையைப் போல் இதையும் தினமும் செய்தாக வேண்டும். காலையும் இரவுமாய் தன்னந்தனியாய்ச் சாப்பிடுவது பிடிக்கவில்லை. ஆனால் நாளை இத்தனை நேரம் சந்துருவும் தன்னோடு இருப்பான் என்ற எண்ணம் சந்தோஷமாய் மனத்தில் மின்ன, அவசரமாய் அள்ளிப் போட்டுக் கொண்டாள்.

வாசலில் சோன்பப்டிக்காரன் மணி அடித்தபடி போய்க் கொண்டிருக்கிறான். பெட்ராமாக்ஸ் விளக்கின் வெளிச்சம் படுக்கையறையின் வழியே நிழலாய் நகர்ந்தது. சந்துரு இங்கே இருக்கும் தருணங்களில் எந்தச் சப்தங்களுமே காதில் விழாதது போல் இருக்கும். இப்போது ஒவ்வொரு சிறு சப்தத்திற்கும் ஆயிரம் அர்த்தங்கள் இருக்கின்றன. வாசல் கதவு சரியாய்த் தான் போடப்பட்டிருக்கிறதா என்று பார்த்து விட்டு வந்து அவள் படுத்துக் கொண்டாள்.

யார் வீட்டிலோ கதவை அறைந்து சாத்தும் ஒலி, மெல்லியதாய் பதினோரு மணிப் பாடல், கோடி வீட்டு கணேசனின் சைக்கிள் மணி ஓசை எல்லாம் விட்டு விட்டுக் கேட்டன. கணேசனின் சைக்கிள் மணி ஓசை கேட்கும் பொழுதெல்லாம் இவள் நினைத்துக் கொள்வாள் :

'சந்துருவும் இப்படி தினமும் காலையில் ஆபீஸ் போய் விட்டு இரவு வந்தால் எத்தனை நன்றாய் இருக்கும்?'

இப்படி மாசத்துக்கு இருபது நாள் டூர் போகும் வேலையை மாற்றிக் கொள்ளக் கூடாதா...?

ஜன்னலின் வழியே வானத்து நட்சத்திரங்கள் பிரகாசமாய்த் தெரிந்தன. நாளை சந்துருவோடு அணைத்துக் கொண்டு, கிசுகிசுப்பாய் பேசிக் கொண்டு.... நினைப்பின் சந்தோஷத்தில் அலுப்பு மறந்தது.

# உமா ஜானகிராமன்

**கா**லை வருவானா, மாலையா என்று தவித்து உள்ளுக்கும் வாசலுக்குமாய் ஆயிரம் நடை நடந்து, சின்ன கதவு சப்தத்திற்கும் ஓடிப் போய்ப் பார்த்து மத்தியானம் சுள்ளென்று வெயில் அடிக்க, சாப்பிடாமல் ஜோதி கண்களை மூடிய பொழுது... சந்துரு வந்து விட்டான்!

மனமும், முகமும் மலர ஓடிப் போய் பெட்டியை வாங்கிக் கொண்டாள். குளித்து, சேர்ந்து சாப்பிட்டு, அவன் வாங்கி வந்த புடைவையை உடுத்தி அழகு பார்த்து, ஆசையாய் பேசி, அவனைக் கட்டி அணைத்துப் புன்னகைக்கையில் ரொம்ப ரொம்ப சந்தோஷமாய் இருந்தது. தான் ரொம்பக் கொடுத்து வைத்தவள் என்று தோன்றியது.

ஆனாலும் இந்தச் சந்தோஷம் எத்தனை நாட்களுக்கு என்று எப்போதும் போல் கேள்வி பிறந்தது. மூலையில் வைத்திருந்த கறுப்புப் பெட்டியைப் பார்க்கப் பிடிக்கவில்லை. மறுபடியும் எப்போது திடீரென்று கிளம்பிப் போவான் என்று தெரியாது. அலுவலகம் விட்டு வந்தவுடனேயே அவன் முகத்தைச் சந்தேகத்துடன் பார்ப்பாள். 'இன்னும் அரைமணியிலே கிளம்பிப் போகணும் ஜோதி...' என்று எங்கே அவன் சொல்லி விடுவானோ என்று பயப்படுவாள். அவனோடு இருக்கும் அத்தனை நேரங்களிலும் இந்த நினைப்பு சின்ன முள்ளாய் மனசின் ஓரத்தில் உறுத்திக் கொண்டே இருக்கும்.

மறுபடியும் தன்னந்தனியாய்ச் சாப்பிட்டு, குளித்து, தூங்கி, மறுபடியும் எழுந்து, குளித்து, சாப்பிட்டு– நினைக்க நினைக்க கசந்து போகும். வாழ்க்கைக்கு இதுதான் அர்த்தமா என்று வெறுத்துப் போகும். காத்திருத்தலில் சுகம் இருக்கிறது என்று சொன்னவளை உதைக்கத் தோணும்.

சந்துரு இதைப் பற்றி எல்லாம் அத்தனை அலட்டிக் கொள்ளாது. இருக்கும் நேரங்களை சந்தோஷ[illegible]யக் கழிக்கும்.








— கோபி. நாகராஜன்

ஜோதி, ஜோதி என்று அவளையே சுற்றிச் சுற்றி வந்து, அவள் புடைவைத் தலைப்பில் கை துடைத்துக் கொண்டு, எதிர்பாராமல் அவளுக்கு முத்தம் கொடுத்து ஆச்சர்யப் படுத்திக் கொண்டு...

ஒரு வாரம் ஓட்டமாய் ஓடி விட்டது. சந்தோஷமான நாட்களுக்குத்தான் கால்களில் எத்தனை வேகம்!

அன்று ஜோதியால் எழுந்திருக்க முடிய வில்லை. மயக்கம், மயக்கமாய் வர, சுருண்டு போய் படுத்துக் கொண்டாள். கஷ்டப்பட்டு எழுந்தபோது வாஷ்பேசினில் தலை கவிழ்த்துக் குலுங்கினாள்.

சந்துரு பதறிப் போனான். துவண்டு போய்க் கிடந்த அவளை டாக்டரிடம் அழைத்துப் போனான்.

"நாள் தள்ளிப் போயிருக்கா?" - டாக்டர் கேட்டவுடன்தான் சடாரென்று ஞாபகம் வந்தது.

ஆமாம். தள்ளித்தான் போயிருக்கிறது. சந்துரு வரும் நாட்களிலேயே கவனம் வைத்திருந்ததால் இதை சுத்தமாய் மறந்து விட்டிருக்கிறேனா!

டாக்டர் யூரின் டெஸ்ட் செய்து பார்த்து விட்டு, அன்று மாலையே 'பாஸிடிவ்' என்ற முடிவை கையில் கொடுக்க, ஜோதி ஆனந்தத்தில் பரவசமானாள்.

ராத்திரி முழுவதும் உறக்கம் வரவில்லை. ஏழு வருடங்கள், எண்பத்து நாலு மாதங்கள், எத்தனை நாட்கள், எண்ண முடியாத நிமிடங்களைத் துளித்துளியாய்க் கழித்திருக்கிறேன். என் தனிமைப் பேயைத் துரத்த எனக்கும் ஒரு துணை வரப் போகிறதா! கண்கள் பளபளக்க சந்துருவைக் கட்டியணைத்துக் கொண்டாள்.

மாலை அலுவலகத்திலிருந்து திரும்பிய சந்துரு, அவள் முகத்தைப் பார்க்காமல் மெல்லிய குரலில் சொன்னான்.

"இன்னும் ஒரு மணி நேரத்திலே பம்பாய் போகணும் ஜோதி. துணி எல்லாம் எடுத்து வச்சுடு."

கறுப்புப் பெட்டியை ஈரத் துணியால் தூசி போகத் துடைத்து, பேண்ட், ஷர்ட்டுகளை அழகாய் அடுக்கி வைத்து, பேஸ்ட், பிரஷ் எல்லாவற்றையும் சின்னப் பெட்டியில் போட்டு அவனிடம் கொண்டு வந்து கொடுக்க, சந்துரு ஆச்சர்யம் பொங்க அவளைப் பார்த்தான்.

வழக்கமான கலக்கம் முகத்தில் இல்லாமல், 'போய்த்தான் ஆகணுமா?' என்ற அர்த்தம் இல்லாத கேள்வி கேட்டு, தானும் கண் கலங்க அவனையும் கண்கலங்க வைத்து... - வழக்கமான ஜோதி இல்லை இவள்.

ஜோதி ஷூவிற்குப் பாலீஷ் போட்டு அவனிடம் கொடுத்தாள். மனத்தின் ஓரத்தில் எண்ணங்கள். இனி நேரமே இருக்கப் போவதில்லை. பிறக்கப் போகும் குழந்தையைப் பற்றிய கனவுகள்...

'வாயில் எச்சில் ஒழுக வெறும் ஜட்டி மட்டும் போட்டபடி என்னோடு வாசலில் நின்று, ஊருக்குப் போகும் அப்பாவுக்கு டாடா சொல்லும்... - கனவுகள் கண்களில் விரிய ஜோதி சிரித்தபடி வாசலுக்கு வந்தாள்.

தான் ஊருக்குப் போகையில் முதன் முறையாய் சந்தோஷமாய் விடைகொடுத்து அனுப்பும் ஜோதியைப் பார்க்கையில் சந்துருவுக்கு மகிழ்ச்சியாகத்தான் இருந்தது.

அவளின் சந்தோஷத்தின் காரணத்தைப் புரிந்து கொள்ள முடிந்தது. கையில் கறுப்புப் பெட்டியுடன் தெருமுனைக்குப் போய்த் திரும்பவும் கை ஆட்டுகையில் மனத்தில் சந்தோஷத்தோடு ஒரு துளி துக்கமும் ஒட்டிக் கொண்டு உறுத்துவதை அவனால் உணர முடிந்தது.

## பார்த்திபன் கனவு

அமரர் கல்கி

## 29. சக்கரவர்த்தி கட்டளை

நெருங்கி வந்த படகுகளைப் பார்த்தபடி சற்று நேரம் திகைத்து நின்ற விக்கிரமன், சட்டென்று உயிர் வந்தவனைப் போல் துடித்துப் பொன்னனைப் பார்த்து, "பொன்னா! எடு வாளை!" என்று கூவினான்.

பொன்னனும் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். விக்கிரமனுடைய குரல் கேட்டதும், அவன் விரைந்து விக்கிரமன் அருகில் வந்து, "மகாராஜா! எனக்கு ஒரு வரம் கொடுக்க வேண்டும்" என்றான்.

"வரம் கேட்க நல்ல சமயம் பார்த்தாய், பொன்னா! சீக்கிரம் கேட்டுவிடு. ஆனால், என்னிடம் என்ன இருக்கிறது நீ கேட்பதற்கு?" என்று சிறிது வியப்புடன் கூறினான் விக்கிரமன்.

"மகாராஜா! மாரப்பபூபதியின் ஆட்களுடன் தாங்கள் சண்டையிடக் கூடாது. அவர்கள் ரொம்பப் பேர். நாமோ இரண்டு பேர்தான்..."

"பொன்னா! நீதானா இப்படிப் பேசுகிறாய்? உனக்கும் சோழ நாட்டு வீர வாசனை அடித்துவிட்டதா?" என்றான் விக்கிரமன்.

"இல்லை, மகாராஜா! என் உயிருக்கு நான் பயப்படவில்லை. இந்த அற்ப உயிரை எந்த விநாடியும் விட்டுவிடச் சித்தமாயிருக்கிறேன். ஆனால் வேறு காரணங்கள் இருக்கின்றன. நாம் இப்போது சண்டையிட்டால் எல்லாம் கெட்டுப் போய் விடும். மகாராஜா! தங்களுடைய அன்னை அருள்மொழித் தேவியைப் பார்க்க வேண்டாமா?.... இன்னொரு முக்கிய விஷயம், தங்களுடைய மூதாதைகளின் வீர வாளைக் கொண்டு முதன் முதலில் உங்களுடைய சொந்தக் குடிகளையா கொல்லுவீர்கள்?" என்று பொன்னன் கேட்டபோது, விக்கிரமனுடைய முகம் வாடியது.

"சரி பொன்னா! போதும், இனிமேல் ஒன்றும் சொல்ல வேண்டாம். நான் வாளைத் தொடவில்லை" என்றான்.

பிறகு குந்தவியைப் பார்த்து, "தேவி! இந்தப் பெட்டியைப் பத்திரமாய் வைத்திருக்க வேண்டும். மறுபடியும் சந்திக்க நேர்ந்தால் கொடுக்க வேண்டும்" என்றான்.

ஆனால் குந்தவியின் செவிகளில் அவன் கூறியது விழுந்ததோ, என்னமோ தெரியாது. அவளுடைய முகத்தில் கோபம் கொதித்துக் கொண்டிருந்தது. ஆவேசம் வந்தவள் போல் நெருங்கி வந்த படகுகளைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

படகுகள் கரையையடைந்தன. மாரப்ப பூபதி முதலில் படகிலிருந்து குதித்தான். மரியாதையாகக் குந்தவி தேவியை அணுகி, "பெருமாட்டி! தங்கள் அனுமதியில்லாமல் இங்கு வந்ததற்காக மன்னிக்க வேண்டும். சக்கரவர்த்தியின் கட்டளையை நிறைவேற்றுவதற்காக வந்தேன்" என்றான்.

குந்தவி முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க, "எந்தச் சக்கரவர்த்தி? என்ன கட்டளை?" என்றாள்.

"தங்களுடைய சகோதரர் மகேந்திர பல்லவரின் கட்டளைதான். செண்பகத் தீவிலிருந்து வந்திருக்கும் ஒற்றனைக் கைப்பற்றி ஜாக்கிரதையாகக் காஞ்சிக்கு அனுப்பும்படி கட்டளை. இதோ பாருங்கள்!" என்று மாரப்பன் ஓர் ஓலையை நீட்டினான்.

அதில் மகேந்திரனின் முத்திரையுடன் மேற்கண்ட விதமான கட்டளை எழுதியிருந்தது.

அதைப் பார்த்துவிட்டுக் குந்தவி, "செண்பகத்தீவின் ஒற்றன் யார்?" என்று கேட்டாள்.

"இதோ நிற்கிறானே, இவன்தான் தேவி!"

"இல்லை; இவர் ஒற்றன் இல்லை. நீர் திரும்பிப் போகலாம்."

"தேவி! இவன் ஒற்றன் இல்லாவிட்டால் வேறு யார்? மனமுவந்து சொல்ல வேண்டும்!" என்று மாரப்பன் கள்ள வணக்க ஒடுக்கத்துடன் கூறினான்.

"பூபதி! யாரைப் பார்த்துக் கேள்வி கேட்கிறாய்? உன்னை மறந்து விட்டாயா?" என்று கண்களில் கனல் பொறி பறக்கக் குந்தவி கேட்டாள்.

"இல்லை; என்னை நான் மறக்கவில்லை. எனக்கு அவ்வளவாக ஞாபக மறதி மட்டும்

கிடையாது. இதோ இவனுடைய முகம் கூடப் பார்த்த முகமாக என் ஞாபகத்தில் இருக்கிறது. ஆம்; இதோ ஞாபகம் வந்து விட்டது. தேவி! இவன், மகா மேன்மை பொருந்திய தர்ம ராஜாதி ராஜ நரசிம்ம பல்லவ சக்கரவர்த்தியினால் தேசப்பிரஷ்ட தண்டனைக்குள்ளானவன் என்பதாய் ஞாபகம் வருகிறது. இவன் ஒற்றன் இல்லையென்றால், தேசப்பிரஷ்டன்! தேசப்பிரஷ்ட மானவன் திரும்பி வந்தால் என்ன தண்டனையென்று தங்களுக்கே தெரியும். தேவி! என் கடமையை நான் செய்ய வேண்டும். தர்ம ராஜாதி ராஜாவான பல்லவச் சக்கரவர்த்தி, தம் சொந்தப் புதல்வியின் வார்த்தைக் காகக்கூட, நான் என் கடமையில் தவறுவதை ஒப்புக் கொள்ள மாட்டார்" என்றான்.

குந்தவியின் உடம்பெல்லாம் நடுங்கிற்று; அவளுடைய மார்பு விம்மிற்று.

"சேனாபதி! இவர் என் விருந்தினர். இவருக்கு நான் பாதுகாப்பு அளித்திருக்கிறேன். இவருக்கு ஏதாவது நேர்ந்தால்..." என்று கூறி, விக்கிரமனை மறைத்துக் கொள்பவள்போல் அவன் முன்னால் வந்து நின்றாள். மாரப்பன் கலகலவென்று சிரித்தான். "ஆகா! சோழ வம்சத்தின் பெருமையை விளங்க வைக்கப் போகும் வீர சிங்கம் ஒரு பெண்ணின் முந்தானையில் ஒளிந்து கொள்ளுகிறான்!" என்று கூறி மீண்டும் சிரித்தான்.

நாணத்தினாலும் கோபத்தினாலும் விக்கிரமனுடைய கண்கள் சிவந்தன. அவன் நாலு எட்டாக நடந்து குந்தவிக்கு முன்னால் வந்து நின்று மாரப்பனைப் பார்த்து, "சித்தப்பா! இதோ நான் வரச் சித்தமாயிருக்கிறேன். அழைத்துப் போங்கள்" என்றான்.

மாரப்பன் கேலிச் சிரிப்புடனே குந்தவியைப் பார்த்து, "ஏழைமேல் ஏன் இவ்வளவு கோபம்? இவனைக் காப்பாற்றித்



தான் ஆக வேண்டுமென்றால், தங்கள் தந்தையையோ தமையனாரையோ வேண்டிக் கொண்டால் போகிறது. சக்கரவர்த்தி கருணையுள்ளவர். இவன், காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டு கப்பமும் செலுத்த ஒப்புக் கொண்டால் கட்டாயம் மன்னித்து விடுவார்" என்றான். இந்த வார்த்தைகள் தான் எதிர்பார்த்தது போலவே விக்கிரமன், குந்தவி இருவருடைய முகங்களிலும் வேதனை உண்டாக்கியதை அறிந்த மாரப்பனுக்குக் குதூகலம் உண்டாயிற்று.

**வி**க்கிரமன் உடனே விரைவாகச் சென்று படகில் ஏறிக் கொண்டான்.

குந்தவி விக்கிரமனை மிகுந்த ஆவலுடன் நோக்கினாள். தன்னை அவன் திரும்பிப் பார்ப்பானென்றும், தன் கண்களினால் அவனுக்குத் தைரியம் கூறலாமென்றும் அவள் எண்ணியிருக்கலாம். ஆனால் விக்கிரமன் திரும்பிப் பார்க்கவேயில்லை.

மாரப்பன் இந்த நாடகத்தைச் சிறிது கவனித்துவிட்டுப் பிறகு பொன்னன் மீது தன் பார்வையைச் செலுத்தினான். "அடே படகோட்டி! நீயும் வா; ஏறு படகில்" என்றான்.

"அவன் ஏன் வரவேண்டும்? பொன்னனைப் பிடிப்பதற்கும் கட்டளையிருக்கிறதா?" என்று குந்தவி கேட்டு மாரப்பனைக் கண்களால் எரித்து விடுபவன் போல் பார்த்தான். மாரப்பன் அந்தப் பார்வையைச் சகிக்க முடியாமல், 'கட்டளையில்லை தேவி! ஆனால், இந்த ஒற்றனுக்கு - தேசப் பிரஷ்டனுக்கு - இவன் ஒத்தாசை செய்திருக்கிறான்....'' என்



றான்.

"பொன்னன் என்னுடைய ஆள். எனக்குப் படகோட்ட வந்திருக்கிறான். அவனைக் கொண்டு போக உனக்கு அதிகாரமில்லை. ஜாக்கிரதை!" என்றாள் குந்தவி.

மாரப்பன் அவளுடைய தொனியைக் கேட்டுத் தயங்கினான்.

குந்தவி மறுபடியும், "தேசப் பிரஷ்டனுக்கு உதவி செய்ததற்காகப் பிடிப்பதென்றால், என்னை முதலில் பிடிக்க வேண்டும்!" என்றாள்.

"ஆம்; தேவி! சக்கரவர்த்தியின் கட்டளை வந்தால் அதுவும் செய்வேன்" என்றான் மாரப்பன். பிறகு அவன் படகோட்டிகளைப் பார்த்து, "விடுங்கள்" என்றான். படகுகள் உறையூரை நோக்கி விரைந்து சென்றன.

## 30. நள்ளிரவில்

படகுகள் போன பிறகு, குந்தவி பொன்னனைப் பார்த்து, "படகோட்டி! உன் மனைவியை எங்கே விட்டு வந்திருக்கிறாய்?" என்று கேட்டாள்.

பொன்னன் அக்கரையில் குடிசையில் விட்டு வந்திருப்பதைச் சொன்னான்.

"உடனே போய் அவளை இங்கே அழைத்துக் கொண்டு வா! பிறகு நமக்குப் பெரிய வேலையிருக்கிறது. உங்கள் மகாராஜாவை எப்படியாவது விடுதலை செய்ய வேண்டும். விடுதலை செய்து இரகசியமாக மாமல்லபுரத்துக்கு அனுப்ப வேண்டும். அவரை இந்த அமாவாசையன்று செண்பகத் தீவு செல்லும் கப்பலில் ஏற்றிய பிறகுதான் நமக்கு நிம்மதி" என்றாள் குந்தவி.

பொன்னன் வியப்புடன், "தேவி! எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!" என்றான்.

"உங்கள் மகாராஜா இங்கே ஜுரம் அடித்துக் கிடந்தாரல்லவா, பொன்னா? அப்போது அவர் தம்மை அறியாமல் கூறிய மொழிகளிலிருந்து அவர் யார், எதற்காக வந்தார் என்பதையெல்லாம் அறிந்து கொண்டேன். ஒவ்வொரு அமாவாசையன்றும் அவருக்காகச் செண்பகத் தீவின் கப்பல் மாமல்லபுரம் துறைமுகத்தில் வந்து காத்திருக்கும். அடுத்த அமாவாசை வருவதற்குள்ளே அவரை தப்புவித்து இரகசியமாக அனுப்பி வைக்க வேண்டும்!" என்றாள் குந்தவி.

"அம்மணி! கோபித்துக் கொள்ளக் கூடாது. எனக்கு இன்னும் ஒரு விஷயம் விளங்கவில்லை. எதற்காக இப்படியெல்லாம் செய்ய வேண்டும்? தங்கள் தகப்பனாருக்கு ஒரு செய்தி அனுப்பினால் போதாதா?"

என்றான் பொன்னன்.

"என் தகப்பனாரை நீ சரியாய்த் தெரிந்து கொள்ளவில்லை, பொன்னா! ஆனால் மாரப்பன் தெரிந்து கொண்டிருக்கிறான். அவருக்குச் சட்டம் என்றால் சட்டம்தான். நீதி என்றால் நீதிதான். சக்கரவர்த்திக்குத் தெரிவதற்கு முன்னால், உங்கள் மகாராஜா கப்பலில் ஏறினால்தான் தப்பலாம். நல்ல வேளையாக, என் தந்தை இப்போது காஞ்சியில் இல்லை. ஏதோ காரியமாய் மாறு வேஷத்துடன் சுற்றிக் கொண்டிருக்கிறார். இதுதான் நமக்குச் சமயம்....."

இவ்விதம் குந்தவி கூறிவந்ததைக் கேட்ட போது பொன்னனுக்கு ஒரு நிமிஷம், தனக்குத் தெரிந்ததையெல்லாம் சொல்லி விடலாமா என்று தோன்றியது. ஆனால், தான் சிவனடியாருக்குச் சத்தியம் செய்து கொடுத்திருந்து நினைவுக்கு வந்தது. மேலும் அவர் என்ன முக்கிய நோக்கத்துடன் இம் மாதிரி இரகசியமாய் காரியங்கள் செய்து வருகிறாரோ, தெரியாது. அந்த நோக்கத்துக்குத் தன்னால் பங்கம் விளையக்கூடாது என்று தீர்மானித்துக் கொண்டு, குந்தவியின் மொழிகளைப் பொறுமையுடன் கேட்டு வந்தான். கடைசியில், "தேவி! விக்கிரம மகாராஜாவின் க்ஷேமம் ஒன்றைத் தவிர எனக்கு உலகில் வேறு ஒன்றும் பொருட்டில்லை. தங்கள் கட்டளைப்படி எதுவும் செய்யக் காத்திருக்கிறேன்" என்றான்.

"சந்தோஷம். நான் மாளிகைக்குப் போகிறேன். நீ முதலில் போய் வள்ளியை இங்கே அழைத்து வா!" என்றாள் குந்தவி.

குந்தவியின் கட்டளையின் பேரில் கிடைத்த படகை எடுத்துக் கொண்டு பொன்னன் அக்கரைக்குச் சென்றான். இதற்குள் நன்றாக இருட்டிவிட்டது. பொன்னனுடைய கைகள் படகைச் செலுத்திக் கொண்டிருக்க, அவனுடைய உள்ளம் அலைந்து கொண்டிருந்தது. உறையூர் சிம்மாசனத்தில் அமர்ந்து ஆட்சி செலுத்த வேண்டிய விக்கிரம மகாராஜா இன்று இரவு அதே உறையூரில் சிறையில் படுத்திருப்பார் என்பதை எண்ணியபோது அவனுடைய நெஞ்சு புண்ணாயிற்று. அன்றிரவே உறையூருக்குப் போய் ஊர் ஜனங்களிடமெல்லாம், "உங்கள் மகாராஜா சிறையில் இருக்கிறார்!" என்ற செய்தியைப் பரப்பி ஒரு பெரிய கலகத்தை உண்டு பண்ணலாமா என்று பொன்னன் நினைத்தான். பிறகு, அது நடக்காத காரியம் என்று அவனுக்கே தோன்றியது. சோழநாட்டு மக்கள் இப்போது வீரமிழந்த கோழைகளாகப் போய்விட்டார்கள். அயல் மன்னனின் ஆதிபத்தியத்தை ஒப்புக் கொண்டு வாழ்கிறார்கள். மாரப்பனைப் போல் பல்லவச் சக்கரவர்த்தியின் கட்டளைகளை அடிபணிந்து நிறைவேற்றவும் காத்திருக்கிறார்கள்.

தன்னுடைய நிலைமையும் அதுதானோ என்ற எண்ணம் பொன்னனுக்குத் தோன்றிய போது அவனுடைய உடம்பு வெட்கத்தினால் குறுகியது. சிவனடியாரின் வேஷத்தையும் அவருடைய பேச்சையும் முழுவதும் நம்பலாமா? அவர் கூறியதெல்லாம் உண்மை என்பது என்ன நிச்சயம்? ஒருவேளை தானே ஏமாந்து போயிருக்கலாமல்லவா.... விக்கிரம மகாராஜாவிடம் உண்மையான அன்பு கொண்டு அவரைக் காப்பாற்றக் கவலை கொண்டிருப்பவர் குந்தவிதேவி என்பதில் சந்தேகமில்லை. யமன் வாயிலிருந்தே அவரை மீட்டு வரவில்லையா? - இவ்விதம் பலவாறாக யோசித்துக் கடைசியில் பொன்னன் குந்தவிதேவியின் விருப்பத்தின் படி காரியம் செய்வதென்று உறுதி கொண்டான்.

படகு அக்கரையை அடைந்ததும் பொன்னன் தன் குடிசையை அடைந்து



கதவு சாத்தித் தாளிட்டிருப்பதைப் பார்த்து அதிசயித்துக் கதவைத் தட்டினான். "யார் அது?" என்று வள்ளியின் அதட்டுங் குரல் கேட்டது. பொன்னனின் குரலைத் தெரிந்து கொண்ட பிறகுதான் அவள் கதவைத் திறந்தாள். 'கதவை அடைப்பானேன்?' என்று கேட்டபோது அவள் கூறிய விவரம் பொன்னனுக்கு வியப்பையும் பயங்கரத்தையும் உண்டாக்கிற்று.

பொன்னன் வருவதற்குச் சற்று முன்னால், இருட்டுகிற சமயத்தில் ஏதோ பேச்சுக் குரல் கேட்டு வள்ளி குடிசைக்குள் சென்று கதவைச் சாத்திக் கொண்டாள். பேச்சுக் குரல் குடிசையின் பக்கம் நெருங்கி வந்தது. ஒரு பயங்கரமான பேய்க்குரல், "நீ இங்கேயே இருந்து பூபதியை அழைத்துக் கொண்டு வா! நான் கோயிலுக்குப் போகிறேன்" என்றது. இன்னொரு குரல், "மகாப் பிரபோ! இந்தக் குடிசையில் தங்கியிருக்கலாமே!" என்றது. "நீ இருந்து அழைத்து வா!" என்று முதலில் பேசிய பயங்கரக் குரல் கூறிற்று. சற்றுப் பொறுத்து வள்ளி மெதுவாகத் திறந்து பார்த்தபோது தூரத்தில் இருவர் போவது மங்கிய வெளிச்சத்தில் தெரிந்தது. அவர்களில் ஒருவன் நெட்டையாக வளர்ந்தவன்; அவனுக்கு ஒரு கை இல்லை என்பதைக் கண்டதும் நெஞ்சுத் துணிவுள்ள வள்ளி கூடப் பயந்து நடுங்கிவிட்டாள். காவேரி சங்கமத்தில் சூரிய கிரகணத்தின் போது அருள்மொழி ராணியைத் தூக்கிச் சென்ற உருவம் இதுதான் என்பது அவளுக்கு நினைவு வந்ததினால் திகில் அதிகமாயிற்று. அவனுக்குப் பக்கத்தில் போனவன் ஒரு சித்திரக் குள்ளனாகத் தோன்றினான். இந்தக் குள்ளனுக்குப் பக்கத்தில் அந்த நெட்டை உருவம் இன்னும் நெடியதாய்க் காணப்பட்டது.

நெடிய ஒற்றைக்கை மனிதன் சாலையோடு கிழக்கே போய்விட்டான். குள்ளன் சாலை ஓரத்தில் ஒரு மரத்தில் உட்கார்ந்து கொண்டான். வள்ளி மறுபடியும் கதவைச் சாத்திக் கொண்டாள்.

இதையெல்லாம் சொல்லிவிட்டு வள்ளி சுற்றுமுற்றும் பார்த்தாள். பொன்னனுடைய கையைச் சட்டென்று பிடித்துக் கொண்டு "அதோ பார்" என்றாள். சாலை ஓரத்து மரத்தடியில் அந்தக் குள்ள உருவம் காணப்பட்டது. அவன் குடிசைப் பக்கம் உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதாகவும் தோன்றியது. பொன்னன் சற்று யோசித்துவிட்டு, "வள்ளி! வா! இன்று ராத்திரி உனக்கு வேலை இருக்கிறது" என்றான்.

"எங்கே வரச் சொல்லுகிறாய்! உறையூருக்கா?" என்று வள்ளி கேட்டாள்.

"இல்லை; வஸந்தத் தீவுக்குத்தான். குந்தவி தேவி உன்னை அழைத்துவரச் சொன்னார்."

"அப்படியா? இளவரசர் - மகாராஜா - சௌக்கியமா? அவர் யாரென்று தேவிக்குத் தெரியுமா?" என்று வள்ளி ஆவலுடன் கேட்டாள்.

"ரொம்ப விஷயம் இருக்கிறது. எல்லாம் படகில் சொல்கிறேன் வா!" என்றான் பொன்னன்.

இரண்டு பேரும் நதிக்கரைக்குச் சென்றார்கள். பொன்னன் வேண்டுமென்றே அதிகமாகச் சத்தப்படுத்திப் படகை அவிழ்த்து விட்டதோடு, சலசலவென்று சப்திக்கும்படியாகக் கோலைப் போட்டு படகைத் தள்ளினான். படகு போவதை அந்தக் குள்ள உருவம் கவனிக்கிறது என்பதை அவன் கவனித்துக் கொண்டான்.

நடுநிசிக்கு ஒரு நாழிகைப் பொழுது இருக்கும் சமயத்தில் பொன்னன் மறுபடியும் படகைத் தள்ளிக் கொண்டு காவேரியின் தென்கரைக்கு வந்தான். இப்போது அவன் தோணித் துறைக்குப் படகைக் கொண்டு வராமல் கொஞ்சம் கிழக்கே கொண்டு போய்ச் சத்தம் செய்யாமல் நிறுத்திவிட்டுக் கரையேறினான். சாலையோரத்தில் தான் முன் பார்த்த இடத்திலேயே குள்ளன் உட்கார்ந்திருப்பதைக் கவனித்தான். குடிசைச் சுவரின் பக்கத்தில் தானும் உட்கார்ந்து உறையூர்ச் சாலையைக் கவனிக்கலானான். ஏதோ முக்கியமான சம்பவம் நடக்கப் போகிறதை எதிர்பார்த்து அவனுடைய உள்ளம் பெரிதும் பரபரப்பை அடைந்திருந்தது.

'டக்டக்' 'டக்டக்' என்ற குதிரைக் குளம்பின் சத்தத்தைக் கேட்டுப் பொன்னன் விழிப்புடன் நிமிர்ந்து உட்கார்ந்தான். ஆம்; உறையூர்ப் பக்கத்திலிருந்துதான் அந்தச் சத்தம் வந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் குதிரை அருகில் வந்துவிட்டது. அதன் மேல் அமர்ந்திருப்பது சாக்ஷாத் மாரப்பபூபதிதான் என்று நட்சத்திர வெளிச்சத்தில் பொன்னன் தெரிந்து கொண்டான். நடுச்சாலையில் நின்ற குள்ளனருகில் வந்து குதிரையும் நின்றது.

(தொடரும்)



"கட்சில களை எடுக்கணும்னு தலைவர் பேசினது வம்பாப் போச்சு!"

"ஏன்?"

"கூலி என்ன தருவீங்கன்னு நிறைய பேர் லெட்டர்ல கேட்டிருக்காங்க!" — அம்பை தேவா

# அருள்வாக்கு

ஆயாஸத்துக்கு எதிர்ப்பதம் அநாயாஸம். 'லைட்'டாக இருப்பது என்கிறார்களே, அதுதான் அநாயாஸம். ஆயாஸம் இல்லாமல், அதாவது எதையுமே ஒரு சுமையாக எடுத்துக் கொண்டு கஷ்டப்படாமல், 'லைட்'டாக, லேசாக இருப்பது அநாயாஸம். எப்போது பார்த்தாலும் 'உர்'ரென்று இருந்து



கொண்டு வாழ்க்கையில் தனக்கு எல்லாம் கஷ்டம் என்று புலம்பிக் கொண்டு, நொந்து கொண்டு இல்லாமல், எதிலும் கடுமையாகச் செய்யாமல், நிம்மதியோடு லேசாகச் செய்ய வேண்டும். இப்படிச் செய்வதாலேயே ஆயாஸப்பட்டுக் கொண்டு செய்வதைவிடப் பல மடங்கு வேலை செய்து விடலாம். பதற்றமில்லாமல் பண்ணுவது அநாயாஸம். பட பட என்று செய்தால் நம்மையும் நெரித்துக் கொண்டு மற்றவர்களையும் நெரிப்பதுதான் மிஞ்சுமே தவிர காரியம் சரியாக ஆகாது. அநாயாஸம் ஒரு பெரிய virtue (குணசீலம்). அலட்டிக் கொள்ளாமல் இருக்கிற குணம் அநாயாஸம். தானும் சிரமப்படாமல், மற்றவர்களையும் சிரமப்படுத்திக் கொண்டிராமல் இருப்பது அநாயாஸம். அநேக கர்மாநுஷ்டானங்களில் உடம்பால் சிரமப்படத்தான் வேண்டியிருக்கும். சிராத்தம் செய்வதென்றால் மத்யான்னம் இரண்டு மணி, மூன்று மணி வரை பட்டினி கிடக்கத்தான் வேண்டும். ஒரு யாகம் என்றால் அதில் இருக்கிற சரீர சிரமம் கொஞ்ச நஞ்சமில்லை. ஆகையால், இங்கே சிரமப்படக்கூடாது என்பது மனஸினால் சிரமப்படாமலிருப்பதைத்தான் குறிக்கும். எந்தக் காரியமானாலும் விக்கினங்கள் ஏதாவது வரத்தான் செய்யும். இதைப் பார்த்து மனஸை strain பண்ணிக் கொள்ளக் கூடாது. எல்லாம் பகவான் திட்டப்படி நடக்கிறது என்று மனஸிலே, பாரமில்லாமல் இருக்க வேண்டும். ஸங்கீத வித்வான் அநாயாஸமாக தாரஸ்தாயி பிடித்தார் என்றால் என்ன அர்த்தம்? சிரம ஸாத்யமானதையே ஸுலபமாக்கிக் கொண்டு விட்டார் என்றுதானே அர்த்தம்? சிரமமான வாழ்க்கையை அப்படிப் பண்ணிக் கொள்ள வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.



சாவியை வலப்புறம் இருப்பினால் பூட்டு திறந்து கொள்கிறது; இடப் புறம் திருப்பினால் பூட்டிக் கொள்கிறது. அப்படியே மனதை இறைவன் பக்கம் திருப்பினால் மோட்சம். உலகை நோக்கித் திருப்பினால் பந்தம்.

– சத்திய சாயிபாபா

தகவல் : என். சண்முகம்



மனிதனும் ஒரு கால் நடைதானே? ஏன் மனிதனைக் கால்நடை எனக் குறிப்பிடுவதில்லை? விலங்குகள் காலால் மட்டும் நடப்பன. மனிதனோ மனநடை, நாநடை, ஒழுக்கநடை முதலியன உடையவன். உதாரணமாக 'நடை தவறி விட்டான்' என்றால் காலால் நடப்பதையா குறிக்கும்? இல்லை, ஒழுக்க நடையைக் குறிப்பதுதான் அதன் பொருள்.

- வாரியார்

தகவல்: பா. அச்சுதன்

# கொஞ்சம் ப்ளேட்லெட் ப்ளீஸ்!

இரத்த தானம் கேள்விப்பட்டிருக்கிறோம். இரத்தத்தில் உள்ள ஓர் அங்கமான 'பிளேட்லெட் தானம் மட்டும் செய்யுங்கள்' என்று வேண்டுகோள் விடுத்திருக்கிறார், அப்போலோ புற்றுநோய் மருத்துவமனை இயக்குநர் டாக்டர் ரமேஷ் நிம்மகட்டா.

அது என்ன பிளேட்லெட் தானம்?

ஓட்டலில் போய், 'கட்லெட் கொண்டு வா!' என்று சொல்கிற மாதிரி, மருத்துவமனைக்குப் போய், 'ஒரு பிளேட்லெட் கொண்டு வாப்பா!' என்று சொல்லிவிட முடியாது.

இரத்தத்திலிருந்து பிளேட்லெட்டுகளை மட்டும் தனியே பெற வேண்டும்! எப்படி பிரித்துப் பெறுவது? டாக்டர் ரமேஷின் குழுவைச் சேர்ந்த பேதாலஜிஸ்ட் (நோய்க் குறி இயல் நிபுணர்) டாக்டர் லக்ஷ்மண் விளக்கினார்:

சாதாரணமாக ஒரு நபருக்கு, ஒரு கன மில்லி மீட்டருக்கு, ஒன்றரை லட்சம் முதல் நாலரை லட்சம் செல்கள் வரை பிளேட்லெட்டுகள் ரத்தத்தில் இருக்கும். இது ரத்தப் புற்று நோய் (லூகீமியா) பிடித்த நோயாளிகளுக்கு வெகுவாகக் குறைந்து காணப்படும். 20,000 செல்களுக்கும் கீழே இது குறைந்து விடும் போது அபாய கட்டத்தைத் தொடும் சாத்தியக் கூறு இருக்கிறது. அப்போது அந்த நோயாளிக்கு பிளேட்லெட்டுகளைச் செலுத்துவோம்.

இது போன்ற நோயாளிகளுக்கு இரத்தத்தைச் செலுத்துவதைவிட, பிளேட்லெட்டுகளை மட்டுமே செலுத்துவது நோயாளிக்கும் நல்லது; ரத்த தானம் செய்பவருக்கும் நல்லது. ஏனென்றால் -

தானம் செய்பவரை செல் செபரேடர் இயந்திரத்துடன் இணைத்து விட்டால், ரத்தத்தில் உள்ள பிளேட்லெட்டுகளை மட்டும் சென்ட்ரிஃப்யுகல் முறையில், இயந்திரம் எடுத்துவிட்டு, ரத்தத்தில் உள்ள சிவப்பு அணுக்கள், வெள்ளை அணுக்கள், பிளாஸ்மா ஆகியவற்றை அப்படியே தானம் செய்பவரின் உடலுக்கே திருப்பிவிடுகிறது. அதனால் சாதாரணமாக ரத்த தானம் செய்பவருக்கு ஏற்படும் சிறு அயர்ச்சியை விடக் குறைவாகவே பிளேட்லெட் தானம் செய்பவருக்கு ஆகும். 350 மில்லி லிட்டர் இரத்தத்திலிருந்து 30 மி.லி. பிளேட்லெட்டுகளை நேரடியாகப் பெற முடியும்.

ஆனால் ஒரே ஒரு வித்தியாசம், இரத்த தானம் செய்ய ஆறு-ஏழு நிமிடங்களே பிடிக்கிறது என்றால், பிளேட்லெட் தானத்துக்கு குறைந்தபட்சம் 70 நிமிடங்களாவது ஆகும்.

பிளேட்லெட்டுகளுக்கு குரூப் கிடையாது. எனவே, A பாசிடிவ் குரூப் இரத்தத்திலிருந்து எடுத்த பிளேட்லெட்டுகளை B பாசிடிவ் குரூப். நோயாளிக்குச் செலுத்த முடியும். அதனால் பாதகம் எதுவும் விளையாது.

பிளேட்லெட்டுகள் சின்னச் சின்னக் கொத்தாக திராட்சைகள் இருப்பது மாதிரி இருக்கும். போன் மாரோ எனப்படும் எலும்பு மஜ்ஜைதான் பிளேட்லெட்டுகளை உற்பத்தி செய்கிறது.

பிளேட்லெட்டின் முக்கியப் பணி ரத்தப் பெருக்கைத் தடுத்து நிறுத்துவதுதான். புது பிளேடில் ஷேவ் செய்து கொள்கிறீர்கள்; கொஞ்சம் அலட்சியமாக இருந்தால் கருக்! வெட்டி விட்டாலும் ரத்தம் உறையாமல் வெளியேறிக் கொண்டேவா இருக்கிறது? இழப்பைக் கட்டுப்படுத்தி ரத்தத்தை உறையச் செய்யும் பணிதான் பிளேட்லெட்டின் பெரிய கைங்கரியம்.

பிளேட்லெட்டுகள் ஏன் குறைகின்றன? ரத்தப் புற்று நோய் ஒரு காரணம். கிருமித் தொற்று அல்லது இன்ஃபெக்ஷன் இரண்டாவது காரணம். ரத்தப் புற்று நோய்க்கு மருந்துகள் தருகிறோமே, அவற்றின் பக்க விளைவுகள் மூன்றாவது காரணம்.



பேட்டி : **சாருகேசி**

கிரெடிட் அனாலிசிஸ் அண்ட் ரிசர்ச் லிமிடெட் அமைப்பின் மதிப்பீட்டுக் குழு, "CARE A (FD)" மதிப்பீட்டை வழங்கியதைத் தொடர்ந்து, சான்மேக் பிக்சட் டெபாசிட்டுகளுக்கு சாதகமாக மேலும் பல சிறப்புகள் சேர்ந்துள்ளன. அசல் மற்றும் வட்டிக்கு பாதுகாப்பு போதிய அளவில் உள்ளது என்று கணிக்கப்பட்டுள்ளது. எனவே எங்கள் மீது நீங்கள் வைத்துள்ள நம்பிக்கை சரியானதே என்று புரிந்து கொண்டிருப்பீர்களே?

டெபாசிட்தாரர்கள் கொண்டுள்ள இந்த முழுமையான நம்பிக்கையின் காரணத்தால்தான் மற்றவர்கள் வியக்கும் வண்ணம் சான்மேக் இந்த அளவுக்கு உயர்ந்து பல சாதனைகளையும் படைத்திருக்கிறது.

பொது டெபாசிட்டுகள் ரூ. 25 கோடிக்கு உயர்ந்துவிட்டன ■ நிகர மதிப்பு ரூ. 9.5 கோடியாக உயர்ந்துள்ளது. ■ ஈடுபடுத்தப்பட்டுள்ள மொத்த நிதியானது ரூ. 50 கோடியைத் தாண்டிவிட்டது. ■ EPS இப்போது ரூ.5 (ஆண்டுக்கணிப்பிலானது) என்ற அளவில் உள்ளது. ■ கிளைகளின் எண்ணிக்கை 26 ஆக உயர்ந்துள்ளது.

இந்த CARE A (FD) மதிப்பீட்டுடன், தன் தகுதிக்கு உரிய மற்றும் ஓர் அங்கீகாரத்தை சான்மேக் பெறுகிறது. அத்துடன் இதனுடைய டெபாசிட் திட்டங்கள், சிறந்த பாதுகாப்புக்கான மற்றும் ஒரு முத்திரையைப் பெறுகின்றன.

# 8

பிரபுவுக்கு சுரம் குறைந்து அன்று வேலைக்குப் போகலாம் என்ற அளவு உடல்நிலை தேறியது. அதற்குள் ஒரு வாரம் ஓடியிருந்தது. பிரபு புறப்பட்டுக் கொண்டிருந்த போது மாலதி அவர் வீட்டு வாசலில் வந்து நின்றாள். அவள் அருகில் ஒரு பையன்... கோபுவாக இருக்க வேண்டும். பிரபு கையிலிருந்த 'பிரீப்கேசை' நழுவ விட்டார். கோபுவுக்கு அவருடைய சாயல் அப்படியே இருந்தது. மாலதியையும் கோபுவையும் மாற்றி மாற்றிப் பார்த்தார். அவர் கண்கள் ஈரமடைந்தன.

''வந்தவங்களை வான்னு கூப்பிடாம இருக்கீங்களே... வா மாலதி... வாப்பா கோபு'' என்று பின்னாலிருந்து சாந்தியின் குரல் ஒலித்தது. சாந்தியின் முகம் எப்போதும் போல் அமைதியின் இருப்பிடமாகத்தான் இருந்தது.

பிரபுவும் உள்ளே வந்து சோபாவில் சாய்ந்தார். 'இனிமேல் இந்தப் பிரச்னையை எப்படிக் கையாளுவது' என்பதைத்தான் அவர் நினைத்தார்.

'பிரச்னையேயில்லை' என்பது போல் சாந்தி பேச ஆரம்பித்தாள்.

''என்னங்க... உம்முன்னு உட்காந்திருந்தா எப்படி?'' என்று பிரபுவைத் தூண்டினாள்.

''நான் சொல்ல என்ன இருக்கிறது சாந்தி... எல்லாந்தான் கண்முன்னேயே நடக்குதே'' என்றார் சோர்வுடன்.

''இப்ப என்ன பிரளயம் வந்து விட்டது? மாலதியும் நீங்களும் காதலித்து கல்யாணம் செய்துகொள்ள நினைச்சீங்க... குடும்பங்களிலே சிக்கல். திருமணம் நின்னுடுச்சி. மாலதி பிரிந்தாள். ஆனால் அவள் கருத்தரித்தது உங்களுக்குத் தெரியாமல் போயிடுச்சு. இப்போ கோபுவுக்கு ஒன்பது வயசு... 'அப்பா எங்கே?' அப்படின்னு கேட்கறவனுக்கு 'இவர்தான்டா உன் அப்பா' அப்படின்னு மாலதி காட்டணும்னு ஆசைப்படறா... அது நியாயமான கோரிக்கை... நான் ஏன் குறுக்கே நிக்கணும்?'' சாந்தி அளவாக, உணர்ச்சிவசப்படாமல் பேசினதைக் கேட்ட பிரபுவுக்கு என்ன சொல்வது என்றே தெரிய வில்லை.

மாலதி கூட வியந்து போனாள்.



''நீங்க இரண்டு பேரும் நினைக்கிறது எனக்குப் புரியுது. சும்மா சினிமாவுல வர்ற மாதிரி ரொம்ப சென்டிமெண்டலா நான் மாற விரும்பலே... தவறுகள் வாழ்க்கையில் தவறாமல் நடப்பவை... அதுக்காக கோபுவின் வாழ்க்கையை இருட்டடிக்க நமக்கு யாருக்கும் உரிமையில்லை... சரிதானே?'' சாந்தி நிறுத்தினாள்.

''இனி என்ன செய்யணும் சாந்தி?'' பிரபு தான் கேட்டார்.

''கோபுவை நம்ம வீட்டிலேயே வைச்சிக்கலாமே'' என்றாள் சாந்தி, மாலதியைப் பார்த்துக் கொண்டே.

''அது எப்படிங்க சரியா வரும்? உங்க இரண்டு குழந்தைகளும் இந்த சூழ்நிலையில் வளர்வதுதான் சரி... கோபுவை நான் இங்கே விடுவது சரியில்லை'' மாலதி தீர்மானமாகவே சொல்லி விட்டாள்.

''கோபுவை இங்கே கூட்டி வர என்ன காரணம் மாலதி?'' என்று பிரபு நேரடியாகக் கேட்டார்.

''உங்களை போய்ப் பார்க்கணும். அப்பா யார்ன்னு அவனுக்குத் தெரியணும்... அது தான் என் விருப்பம். அது நிறைவேறிடிச்சு'' மாலதியின் குரல் கம்மியது.

''நாம எல்லோருமே யோசனை செய்து முடிவுக்கு வர வேண்டிய விவகாரம் இது...

யாரும் அவசரப்படாம இருந்தால் நல்லது" சாந்தி மற்ற இருவரையும் வேண்டிக் கொண்டாள்.

"யோசனை செய்வோம்" என்று பிரபு ஒப்புக் கொண்டார்.

மாலதி கோபுவின் கையைப் பிடித்துக் கொண்டே எழுந்தாள். "நாங்க வந்து பிறகு பார்க்கறோம்'' என்று விடைபெற்றுக் கொண்டாள்.

அவர்கள் போனதும் சாந்தியிடம் பேசத் தொடங்கினார்.

"உனக்கு மாலதியை எத்தனை காலமாகத் தெரியும்?"

"நாலு வருஷமாகத் தெரியும்."

"ஏன் இத்தனை வருஷமா என்கிட்ட சொல்லலே?"

"எனக்கே அதிக குழப்பமாக இருந்தது. எப்படித் தீர்மானிக்கலாம் என்பதை நான் புரிந்து கொள்ள நாலு வருஷம் ஆச்சு. நரக வாழ்க்கையை நான்

# ரெண்டு மிகு கமிசனி

அனுபவித்தேன்" சாந்தி ஒப்புக் கொண்டாள்.

"என்னிடம் சொல்லியிருந்தா நல்லாயிருந்திருக்கும்."

"நீங்களும் என்னுடன் குழம்பின உலகில் வந்து அதிகக் குழப்பம் கூடியிருக்கும்... இப்போதும் உங்களுக்குக் குழப்பம் குறைந்த பாடில்லையே!'' என்றாள் சாந்தி. சாந்தி மனதில் பட்டதைப் பேசாமல் இருந்ததே இல்லை.

"நீ சொல்வது உண்மைதான் சாந்தி" என்று அவளை அன்புடன் பார்த்துக் கொண்டே சொன்னார்.

பிரபு தன் காரியாலய அறைக்குள் போய் சில நிமிடங்களில் 'ஆராய்ச்சி அறைக்குப் போகிறேன்' என்று விரைந்தார்.

அங்கே பாலு, சாலமன் எப்போதும் போல் வேலையில் கவனமாக இருந்தனர்.

"குட்மார்னிங் பாலு, சாலமன்" என்ற உற்சாகமான குரல் வந்த திசையில் அவர்கள் பார்த்தபோது, பிரபு பதிலுக்குக் காத்திராமல் எலிக் கூண்டுகள் இருந்த பக்கம் போய்க் கொண்டிருந்தார்.

இரண்டு எலிக்கூண்டுகளையும் கவனமாகப் பரிசோதித்தார். எண்ணிக்கைகள் சரியாக இருந்தன. 'மேலதயான்' கொடுக்கப்படாத ஆண் எலிகள் இருந்த கூண்டு அவருடைய கவனத்தைக் கவர்ந்தது. அவை ஆரோக்கியமாக இருந்தன. எடை குறையாமலிருந்தன. அருகிலிருந்த பெண் எலிகளிடமிருந்து டெஸ்டுக்காக கொஞ்சம் 'சாம்பிள்'களை எடுத்துக் கொண்டார். அவை கருத்தரித்திருக்கின்றனவா என்பதை அறிந்து கொள்ள டெஸ்டுகளைச் செய்யுமாறு பாலுவிடம் 'சாம்பிள்'களைத் தந்தார்.

மற்றொரு கூண்டிலிருந்த, 'மேலதயான்' கொடுக்கப்பட்ட ஆண் எலிகள் சோர்வுற்றவையாக இல்லாவிடினும், அவைகளின் எடை குறைந்து இருந்தது. அவைகளில் ஒன்று இறந்து போனதாக 'டெக்னிஷியன்' ஏற்கெனவே ரிப்போர்ட் வைத்திருந்தான். அருகிலிருந்த பெண் எலிகளிடமிருந்து முன் போலவே 'சாம்பிள்'களை எடுத்தார். சாலமனிடம் தந்து என்ன டெஸ்டுகள் வேண்டும் என்று விவரித்தார்.

பாலு, சாலமன் இருவரும் போனதும், வழக்கமான கனமான புத்தகத்தில் குறிப்புகளை எழுதிக் கொண்டார். ஆராய்ச்சி அறையில் ஒரு 'ரவுண்டு' போய் விட்டு, தன் அறைக்குப் போய் கம்ப்யூட்டரைத் தட்டினார். மேலும் சில குறிப்பு களை 'மேலதயான்' ஆராய்ச்சிப் பக்கங்களில் சேர்த்தார். அதை ஒரு 'பிரின்ட்' எடுத்துப் படித்துக் கொண்டிருந்தபோது அவருடைய போன் அலறியது.

"டாக்டர் பிரபு பேசறேன்" என்றார்.

"என்னங்க... மாலதியை ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கு.. உடனே நீங்க அங்கே வரணும்'' சாந்தி விவரத்தைச் சொன்னதும் பிரபுவுக்கு கைகால் ஓடவில்லை. சில நிமிடங்கள் யோசனை செய்தார். தன் குறிப்புப் புத்தகம், பை எல்லாவற்றையும் மேசையிலேயே வைத்துவிட்டு, பானுவைக் கூப்பிட்டார்.

"பானு, நான் அவசரமாக வெளியே போகணும். இதையெல்லாம் கவனமா உள்ளே வைச்

வாசன்




- விருதை ராஜப்பிரியன்

சிரு" என்று வெளியே புயலென ஓடினார்.

பானு அவருடைய மேசையிலிருந்த தாள்களை ஒழுங்குபடுத்தினாள். எல்லாவற்றையும் பையில் வைத்து காபினட்டுக்குள் பூட்டினாள். பிறகு வெளியே தன் இருப்பிடம் போய் வேலையைக் கவனித்தாள்.

பாலுவும் சாலமனும் உள்ளே நுழைந்தனர்.

"பானு, டாக்டர் பிரபு கேட்ட டெஸ்ட் ரிசல்டுகள் வந்தாயிற்று... கொடுக்கலாமா?" என்றான் பாலு.

"அவர் ஏதோ எமர்ஜன்ஸின்னு போயிட்டார். எப்போது திரும்புவார்னு தெரியாது."

"உள்ளே வைச்சிடலாமா... இது கூட ஒரு சின்ன ரிப்போர்ட் எழுதணும்..." என்றான் சாலமன்.

"சரி... வேலை முடிஞ்சதும் சொல்லுங்க" என்று பானு மீண்டும் தன் வேலையில் கவனம் செலுத்தலானாள். உள்ளே பிரபுவின் மேசை துப்புரவாக இருந்தது. பாலு சாலமனைப் பார்க்க, சாலமன் அங்கிருந்த கம்ப்யூட்டரையே கண்கொட்டாமல் பார்த்திருந்தான். கம்ப்யூட்டர் திரையில் எழுத்துக்கள் சாலமனை 'வா வா' என்று அழைத்தன. அருகே போன சாலமனின் வாய் தானாகத் திறந்து கொண்டது.

பாலுவை சைகை செய்து கூப்பிட்டான்.

பாலுவும் சத்தம் எழுப்பாமல் கம்ப்யூட்டர் திரையிலிருந்தவற்றைப் படித்தான். அவன் முகமும் மலர்ந்தது. சாலமன் கம்ப்யூட்டர் டிஸ்கை வெளியே எடுத்தான். கம்ப்யூட்டரை நிறுத்தி விட்டு இருவரும் வெளியே புறப்படும் போது, பாலு டெஸ்ட் ரிசல்ட்டுகள் எழுதப்பட்டிருந்த தாள்களை மேசையின் மீது வைத்தான்.

"பானு... நாங்க வர்றோம்... டாக்டர் பிரபு வந்ததும் ஏதாவது கேள்விகள் இருந்தால் எங்களைக் கூப்பிடச் சொல்" என்று நிதானமாகச் சொல்லி விட்டு சாலமன் நகர்ந்தான். பாலு பின்னாலேயே சென்றான்.

பிரபுவும் இல்லை... இப்போ எதுக்கு ஆராய்ச்சி அறைக்குப் போகணும்?" என்றான் பாலு.

"நேராக ரங்கதுரைக்கு போன் செய்ய வேண்டியதுதானேன்னு சொல்றியா?" சாலமன் சிரித்தான்.

"நான் சொல்லித்தான் உனக்குத் தெரியணுமா வாத்தியாரே?" பாலு 'வாத்தியார்' போட்டுப் பேசினால் அவனுக்குப் பரபரப்பு அதிகமாகி விட்டது என்று அர்த்தம்!

சாலமன் கம்ப்யூட்டர் டிஸ்கை வெளியே எடுத்தான். "எல்லாம் இதிலே இருக்கு... பிரபு ஆபீஸ் திரும்பியதும் இதைத் தேடுவான்... காபினட்டில் இருக்கிறதென்று நினைப்பான்... அப்புறம்தானே தெரியும் அவன் முகம் எப்படி மாறப் போகுதுன்னு" கடகடவென்று சாலமன் சிரித்த சிரிப்பு பாலுவுக்கு வேடிக்கையாக இருந்தது.

"அப்படின்னா இதைத் திருப்பி பிரபுவின் அறையில் வைக்க வேண்டாமா?" பாலுவின் வெகுளித்தனம் வெளியே வந்தது.

"எங்க அப்பா குதிருக்குள்ளே இல்லைன்னு சொல்லணுமா?" மீண்டும் சாலமன் சிரித்தான்.

இருவரும் கட்டடத்துக்கு வெளியே வந்தனர். அடுத்தத் தெருவிலிருந்த கடையிலிருந்து போன் செய்தான் சாலமன். கடையிலிருந்த கசமுச கூட்டத்தில் கடைக்காரன் இவர்கள் யாருக்குப் போன் செய்கிறார்கள் என்பதை கவனிக்கவில்லை.

"ரங்கதுரை நம்மளை மூணு மணிக்கு



வரச் சொல்லியிருக்கிறார்" என்று மற்ற விவரங்களை பாலுவுக்குச் சொல்லிக் கொண்டே சாலமன் நடந்தான்.

பாலுவும் சாலமனும் ரங்கதுரை சொன்ன ஒரு தெருவில் காத்திருந்தார்கள். மூணேகால் மணிக்கு ரங்கதுரையின் கார் வந்து நின்றவுடன் அவர்கள் அதில் ஏறினார்கள்.

"நேராக வீட்டுக்கே போயிடு" என்று டிரைவரிடம் ரங்கதுரை சொன்னதும் கார் புறப்பட்டது.

காரில் ரங்கதுரை எதுவும் பேசவில்லை. பாலுவும் சாலமனும் ஒருவரையொருவர் பல முறை பார்த்துக் கொண்டார்கள். 'இந்த ஆள் அழுத்தமானவன்தான்' என்பது அவர்களின் அந்தப் பார்வைக்குப் பொருள்.

வீடு வந்து சேர்ந்ததும், "நீ இன்னும் ஒரு மணி கழித்து வந்தா போதும்" என்று டிரைவரை அனுப்பி விட்டார் ரங்கதுரை.

மணியைத் தட்டிய ரங்கதுரை ஆள் வந்ததும், "மூணு காப்பி.. ஏ ஒன்னா இருக்கணும்... அப்படியே பலகாரம்..." என்று சொல்லி அனுப்பினார்.

"டாக்டர்களே... அன்னிக்கே உங்களுக்கு ஓட்டலிலே ஒண்ணும் வாங்கித் தரலேன்னு வருத்தப்பட்டேன்... அவசரமாகப் போக வேண்டி இருந்தது."

"அதனாலென்ன மிஸ்டர் ரங்கதுரை" என்றான் சாலமன்.

"சரி.. என்னென்ன விவரங்கள் கொண்டு வந்திருக்க?"

"நிறைய விரவங்கள் உண்டு. 'மேலதயான்' உணவில் கொடுக்கப்படுகிற எலிகள் - அதாவது ஒரு கிலோ கிராம் எடைக்கு 5000 மில்லி கிராம் அளவு மருந்துன்னு - உயிருக்கு ஆபத்தில்லாமல் இருக்கின்றன. ஆனால் எடை குறைகிறது. வளர்ச்சி குறைகிறது. இது போல் மற்ற விலங்குகளுக்கும் என்னென்ன அளவு, எந்த விளைவுகளை உண்டாக்கும்னு எல்லா விவரமும் இதில் இருக்கிறது" என்று பாலு சில தாள்களைக் கொடுத்தான்.

"முக்கியமாக, விவசாயிகளுக்கு இதைப் பயன்படுத்தும்போது கெடுதல் நேருமா?" ரங்கதுரை குறிப்பாகக் கேட்டார்.

"எந்தவிதமான நோயும் ஏற்படாது... ஆனால் ஆண்களுக்கு உயிரணுக்களின் எண்ணிக்கை வெகுவாகக் குறையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது" சாலமன் விளக்கினான்.

"டாக்டர் பிரபுவும் இதையேதான் எதிர் பார்க்கிறார்" பாலு குறுக்கிட்டான்.

"பிரபு இதை வைத்து மேலே என்ன ஆராய்ச்சியைத் தொடரப் போகிறார்? உங்களால் அறிந்து கொள்ள முடிந்ததா?"

"அவர் ஆராய்ச்சிக் குறிப்புகள் நிறைய இந்த கம்ப்யூட்டர் டிஸ்கில் இருக்கின்றன... இதை ஒரு பிரிண்ட் அவுட் எடுத்தால் நமக்குப் பயன்படும்" என்றான் சாலமன்.

"நான் பார்த்துக் கொள்கிறேன்... நீங்கள் இருவரும் இப்போது எனக்கு செய்த உதவியை நான் மறக்க மாட்டேன்" என்று அவர் சொல்லி முடிக்கவும் காப்பி, பலகாரம் வரவும் சரியாக இருந்தது.

மேலும் அரை மணி நேரம் ரங்கதுரையிடம் பேசிவிட்டு, சாலமனும் பாலுவும் புறப்பட்டனர். அவர்கள் போன கார் தெருவில் மறைந்ததும் ரங்கதுரை வீட்டுக்கு நுழைந்து போனை எடுத்தார். அடுத்த பக்கத்திலிருந்து ஓர் ஆண் குரல் கேட்டது.

"நான் சொன்னதெல்லாம் நினைவிருக்கட்டும்.. சரியான அளவு போட வேண்டும்.. தினமும் தண்ணீர் தாராளமாகக் கொடுக்க வேண்டும்... கவனம் வேண்டும்" இதையே அடுத்த மூன்று முறையும் போன் செய்து வேறு வேறு ஆட்களிடம் சொன்னார் ரங்கதுரை. அவர் முகத்தில் அலாதியான திருப்தி ஏற்பட்டது.

(தொடரும்)



# MULTIPLE

## FINANCE AND INVESTMENTS

| ஃபிக்சட் டெபாசிட் | | | |
|---|---|---|---|
| குறைந்தபட்ச தொகை | காலம் | வட்டி விகிதம் (ஆண்டிற்கு) | ஊக்கத்தொகை |
| ரூ. 10,000/- | ஓர் ஆண்டு | 24% | 6% |

| க்யூமுலேடிவ் டெபாசிட் | | | |
|---|---|---|---|
| குறைந்தபட்ச தொகை | காலம் | முதிர்வுத் தொகை | பரிசு |
| ரூ. 10,000/- | 33 மாதங்கள் | ரூ. 20,000/- | 1 கிராம் தங்க காசு |
| ரூ. 25,000/- | 60 மாதங்கள் | ரூ.1,00,000/- | 2 கிராம் தங்க காசு |

**வட்டியானது பின் தேதியிட்ட காசோலைகளாக வழங்கப்படும்.**

**முதிர்வுத் தொகை பின் தேதியிட்ட காசோலையாக வழங்கப்படும்.**

## MULTIPLE FINANCE AND INVESTMENTS

**H.O. :** F2, இரண்டாவது மாடி, ஸ்வாதி காம்ப்ளக்ஸ், 34, வெங்கட்நாராயணா சாலை, (நந்தனம் டிராபிக் சிக்னல் அருகில்) **சென்னை** - 600 035. ☎ (044) 455130

**கிளை அலுவலகங்கள்**

10, இரண்டாவது மாடி, S.V.V. காம்ப்ளக்ஸ், (சிப்பி தியேட்டர் எதிரில்)
No.9, சாஸ்திரி சாலை, தில்லை நகர், **திருச்சி** - 620 017. ☎ (0431) 33076

5/13, ராகவன் தெரு, முதல் மாடி, கௌரி தியேட்டர் எதிரில், சுவர்ணபுரி,
**சேலம்** - 636 004. ☎ (0427) 448683

15, மூன்றாவது மாடி, 52 தமிழ் சங்கம் ரோடு, (தமிழ் சங்கம் அருகில்)
**மதுரை** - 625 001 ☎ (0452) 38341.

180, வைசால் தெரு, இரண்டாவது மாடி, (அண்ணா சாலை பிரிவு)
**பாண்டிச்சேரி** - 605 001. ☎ (0413) 39960.

# ஸ்ரீ கந்தசுவாமி

## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1990

பதிவு அலுவலகம்: 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2. ph: 848917

கிளை அலுவலகம்: 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-600 015. போன்: 459569




### பிக்சட் டிபாசிட்

| 46நாள் | 3மாதம் | 6மாதம் | ஆண்டு | 2ஆண்டு | 3ஆண்டு | 4ஆண்டு | 5ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%**

5 வருடங்கள் ரூ.50,000/- அதற்கு மேலும்

### PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 25,000 | 60 மாதம் | ரூ. 70,000 |

### சொத்துக்கள் மீது கடன்

- வீடு / ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்.
- மாத வட்டி ரூ. 1.85 மட்டுமே
- விரைந்த சேவை.
- சென்னை மாநகராட்சி எல்லைக்குள் இருக்க வேண்டும்.



### நகைக்கடன்

- குறைந்த வட்டிக்கு கிடைக்கும்
- 10 கிராமுக்கு ரூ.3000 வழங்கப்படும்.
- R.D. கட்டத் தேவையில்லை
- எந்த சார்ஜும் வசூலிப்பதில்லை



**பாதுகாப்புப் பெட்டக வசதியும் உண்டு.**

## பென்ஷனர் நலத்திட்டம்

**20% P.a** ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும் காலம் 1 ஆண்டு வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.



சேர்மன்:

**P. பாலசுப்பிரமணியம்,** B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
கந்தகோட்டம்,
சென்னை-600 003.
ஆலோசகர்
பார்க் டவுன் பெனிபிட்
பண்டு லிட்.

இயக்குநர்கள் குழு

R.விவேகானந்தன் B.Com.,
(Chairman : Park Town Benefit Fund Ltd.)
A.சுப்பிரமணியன்
V.சண்முகவடிவு B.A.,
V.விஜயகோபால் B.Com., D.C.P.
M.ராஜேந்திரன்
P.ஏகாம்பரம்

பங்குதாரர்களுக்கு மட்டும்

H.O. Friday Holiday | (It is a P.B. Group Concern) | B.O. Tuesday Holiday

# பணம் பண்ணலாம் வாங்க!

## சிகாமணிக்குச் சளைக்காத சகோதரி!

சிகாமணிக்குச் சளைக்காத சகோதரியாக ஒரு பெங்களூர் வாசகி கடிதம் எழுதியிருக்கிறார். ஸ்ரீமதி நாராயணன் என்ற அந்தச் சகோதரி எழுப்பும் கேள்விகளின் சாராம்சம் இதுதான்:

'பால் பண்ணையிலும் நெல் வளர்க்கும் திட்டத்திலும் முதலீடு செய்யச் சொல்லிக் கோரும் கம்பெனிகள், கம்பெனி சட்டம் (1956) இன் கீழ் செயல்படுகின்றனவா? இந்த நிறுவனங்களை மேற்படி சட்டம் கட்டுப்படுத்தவில்லையெனில், முதலீட்டாளர்களுக்கும் அவற்றுக்கும் இடையிலான ஒப்பந்த உறவு எத்தகையது? மாநிலங்களுக்கிடையே நெல் போக்குவரத்துத் தடை செய்யப்பட்டால் என்னாகும்? பால் விலை, நெல் விலை ஏறிவிட்டாலும் தொடர்ந்து முதலீட்டாளர்களுக்கு அதே அளவு பால்/நெல் சப்ளை ஆகுமா? அப்படி சப்ளை ஆவது குறைந்தாலோ நின்றாலோ எந்த சட்டத்தின் கீழ் நடவடிக்கை எடுக்கலாம்? இந்த நிறுவனங்கள் செபி (SEBI) கட்டுப்பாட்டில் வராதா....?'

பெயரின் இறுதியில் 'பிரைவேட் லிமிடெட்' அல்லது 'பப்ளிக் லிமிடெட்' என்ற சொற்களை உடைய எந்த ஒரு நிறுவனமும் இந்திய கம்பெனி சட்டம் (1956)க்கு உட்பட்டுத்தான் நடத்தப்பட வேண்டும்.

பிரைவேட் லிமிடெட் நிறுவனம் என்னும் போது ஒரு சில நபர்களே பங்குதாரர்களாக இருப்பார்கள். பப்ளிக் லிமிடெட் நிறுவனங்கள்தான் பங்குச் சந்தைக்கு வந்து பொது மக்களிடம் பங்குகள் விற்று அவர்களைப் பங்குதாரர்களாக்கிக் கொள்கிறது. இது ஏற்கெனவே ஸ்ரீமதி நாராயணனுக்கும் வேறுபல வாசகர்களுக்கும் தெரிந்திருக்கக்கூடும்.



எனினும், பால் பண்ணை, மாம்பழப் பண்ணை, தேக்குப் பண்ணை அல்லது நெல் பண்ணை போன்றவை லிமிடெட் கம்பெனிகளாக இருந்தாலும், அவற்றில் முதலீடு செய்யும்போது நாம் அந்த நிறுவனத்தின் பங்குதாரர் ஆவதில்லை. முதலீட்டாளர் என்கிற முறையில் நமக்கு வட்டிக்குப் பதிலாக பாலோ, அரிசியோ கிடைக்கிறது. எனவே அத்தகைய நிறுவனத்துக்கும் நமக்கும் இடையே உள்ள உறவு ஒரு வியாபாரிக்கும் - நுகர்வோருக்கும் இடையே உள்ள உறவுதான். சட்டப்படி நடவடிக்கை மேற்கொள்வதெனில் கன்ஸ்யூமர் சட்டத்தின் கீழ்தான் நடவடிக்கை எடுக்கலாம்.

பங்குச் சந்தைக்கு வராததால் இந்நிறுவனங்கள் SEBI கட்டுப்பாட்டிற்குள் வராது.

பால் விலை உயர்வோ, நெல் விலை உயர்வோ தங்களது 'வாக்குறுதியை' பாதிக்காது என்றுதான் சம்பந்தப்பட்ட நிறுவனங்கள் சொல்கின்றன. பொறுத்திருந்து பார்க்க வேண்டும்.

சிகாமணியின் மைத்துனர் கல்ஃபில் இருக்கிறார். கலர் டி.வி., டெக், மியூசிக் சிஸ்டம், இரண்டு பெண் குழந்தைகளுக்கும் இருபது - இருபத்திரண்டு வயதில் சௌகரியமாகக் கல்யாணம் பண்ணும் அளவுக்கு நகைகள் என்று எல்லாம் வாங்கியாகிவிட்டது. அப்படியும் கையில் 'திர்ஹம்' தாராளமாக நிற்கிறது.

''இந்தியாவில் எப்படி? எதில் முதலீடு செய்யலாம்?'' என்று கேட்டார் சிகாமணி.

இப்போதெல்லாம் என்.ஆர்.ஐக்கள் (அதான்-திர்ஹம், தினார், டாலரில் திளைக்கும் Non-Resident-Indians) இங்கே வங்கியில் சேமிப்புக் கணக்கு ஆரம்பிக்கலாம். ஃபிக்ஸட் டெபாஸிட் போடலாம். வட்டியையும் முதலையும் டாலராகவே வாபஸ் பெறும் வசதி இருக்கிறது.

என்.ஆர்.ஐ.க்கள் இந்தியாவில் ஷேர்கள் வாங்கி, விற்கலாம். சில மாதங்களுக்கு முன்பு வரையிலும், என்.ஆர்.ஐ.க்கள் ஷேர் வாங்கினால் குறைந்தபட்சம் ஒரு வருடத்துக்கு அதை விற்கக் கூடாது என்று சட்டம் இருந்தது. இப்போது அந்தச் சட்டம் நீக்கப்பட்டு விட்டது. எப்போது வேண்டுமோ ஷேர்களை விற்கலாம். ஆனால் லாபத்தில் இருபது சதவிகிதம் capital gains tax என்ற வரியாகச் செலுத்த வேண்டும்.

ரூபாயின் மதிப்பை விட திர்ஹம், தினார், டாலர் மதிப்பு மிக அதிகம் என்பதால் இந்த வரி பெரிய சுமையாகத் தெரியாது.

என்.ஆர்.ஐ.க்கள் யூனிட்ஸ் வாங்கவும், இந்தியாவில் வீடு, மனை வாங்கவும் தொழில்கள் தொடங்கவும் வசதியாகச் சட்டங்கள் தளர்த்தப்பட்டு விட்டன.

அந்நியச் செலாவணி வரவை அதிகரிக்கச் செய்யும் நோக்குடன் அரசாங்கம் செயல்பட்டிருக்கிறது.

சிகாமணியின் மைத்துனரும் இதர என்.ஆர்.ஐக்களும் ஏமாற்றாத உறவினர்கள் மற்றும் புரோக்கர்கள் உதவியுடன் தாய்த் திருநாட்டின் வளம் பெருக உதவலாம்.

(பணம் பெருகும்)

**வி. கோபாலன்**


'ஹா'ப்பாரு!
அதான் ஆளுக்கொரு வடை குடுத்தேனே அப்படியும் என்ன சண்டை?
என் வடையில் மட்டும் ஓட்டை பெரிசா இருக்கு!
ஒரு தோசைக்கு மேல சாப்பிடக் கூடாதுன்னு டாக்டர் சொல்லியிருக்கார்!
இங்கே போடணும்!
குப்பைத் தொட்டி
அவளுக்கு ஜாகிங்ன்னா ரொம்ப இஷ்டம்!

**WHEN THE TIMES DON'T SUIT YOU, MAKE SURE, YOU SUIT THE TIMES.**
**— TURKISH PROVERB.**

பொதுவாக என்னைப் பார்த்து இப்பொழுது சிலர் கேட்பார்கள், "நீங்கள் அந்தக் காலத்தில் எடுத்த திரைப்படங்களின் Emotional depthஐயும் அழுத்தத்தையும் இப்பொழுது எடுக்கும் படங்களில் அவ்வளவாகப் பார்க்க முடியவில்லையே!" என்று.

உதாரணமாக 'எதிர் நீச்சலை'ச் சொல்வார்கள். 'இருகோடுகளை'ச் சொல்வார்கள். தாமரை நெஞ்சம், அரங்கேற்றம், அவள் ஒரு தொடர்கதை, அபூர்வ ராகங்கள் இவைகளையும் குறிப்பிடுவார்கள்.

அந்தப் படங்களையெல்லாம் அன்று ரசித்தவர்களின் வயது இன்றைய காலக்கட்டத்தில் ஏறத்தாழ எனக்கு சமவயதாக இருக்கும்.

கால வித்தியாசம் ஏற்படுத்திய ரசனை மாற்றத்தை அவர்களால் அங்கீகரிக்க முடியாமல், அவர்கள் எல்லாம் அந்த மேல்மட்ட ரசனையிலேயே தங்கிவிட்டவர்கள்.

காலத்தோடு கூடவே நான் மட்டும் சற்று மாறி வந்திருக்கிறேன் என்பதாலோ என்னவோ, இந்தக் குற்றச்சாட்டுக்கு நான் காரணமாகியிருக்கிறேன்.

நல்ல கதை தான் என்றும் வெல்கிறது என்பது ஒருபுறமிருந்தாலும், கைக்குட்டை சகிதம் தியேட்டருக்குச் செல்ல இன்று திரைப்பட ரசிகர்கள் தயாராக இல்லை என்பதும், over அழுகை அல்லது over sentiment அவர்களுக்குப் புளித்துப் போய்விட்டது என்பதும் மறுக்க முடியாத உண்மைகள்.

*"அத்தான்! என்னத்தான்!*
*அவர் என்னைத்தான்!*
*எப்படிச் சொல்வேனடீ?"*

அன்றைய காலக்கட்டத்தில் இந்தப் பாடலைப் பாடாத டீக்கடை இல்லை. ஆனால் இன்றைக்கு... "சிக்கு புக்கு சிக்கு புக்கு ரயிலே..." பாடத் தெரியாத மூன்று வயதுக் குழந்தையில்லை.

ஆக, கால ஓட்டத்தில் ரசனை என்பது ஒரே இடத்தில் தேங்கி நிற்பதில்லை. அந்த ரசனை மாற்றத்துக்கேற்றபடி தன்னை மாற்றிக் கொள்பவர்கள் நிலைத்து நிற்கிறார்கள்.

'சர்வர் சுந்தரம்' திரைப்படத்தில் நான் ஒரு வசனம் கையாண்டிருப்பது இந்த நேரத்தில் எனக்கு நினைவுக்கு வருகிறது. "நீ விரும்பியது உனக்குக் கிடைக்கவில்லையென்றால் உனக்குக் கிடைத்ததை நீ விரும்பி விடு...."

வெகுஜன ரசனை இதுதானென்றால் நீயும் அந்த ரசனைக்கேற்ப உன்னை மாற்றிக் கொண்டு....

Better stoop to conquer.

---

# கே. பாலசந்தர்

---

வெகுஜன ரசனையை மீண்டும் பண்படுத்த, அவர்களோடு அவர்களாகவே இருந்து மீண்டும் ரசனையை உயர்த்த வேண்டியது திரைப் படைப்பாளியின் கடமையாகிறது.

கவியரசு கண்ணதாசன் சொல்வார்:

சினிமாவுக்குப் பாடல் எழுதுவது இரண்டு வகை. ஒன்று, நம் சொந்த அறிவைப் பயன்படுத்திக் கொண்டு பாடல் எழுதுவது; இரண்டு, மற்றவர்களின் அறியாமையைப் பயன்படுத்திக் கொண்டு எழுதுவது.

"என் அறிவை நான் பயன்படுத்திக் கொள்கிற சந்தர்ப்பத்தை பாலு, நீங்கள் அமைத்துக் கொடுக்கிறீர்கள்" என்று சொல்வார்.

கவிஞர்களிடம் பாடல்களை எழுதி வாங்குவதே ஒரு தனி சாமர்த்தியம்தான். இங்கே ஒரு ரகசியத்தைச் சொல்கிறேன்.



• வாலி

**48**

கவிஞர்கள் எழுதிக் கொடுக்கும் பாடல்களை நாம் படித்துப் பார்க்கும் போதே நமது expression ஐக் கவிஞர்கள் கூர்மையாக கவனித்துக் கொண்டே இருப்பார்கள். பாடல் வரிகள் இன்னும் நன்றாக வரலாம் என்று நாம் உள்ளூர நினைத்தாலும், வரிகளைப் படித்துப் பார்க்கும்போது முகத்தைப் பிரகாசமாகவும் அந்த வரிகளை மிகவும் ரசிப்பது போலவும் முகபாவத்தை வைத்துக் கொள்ள வேண்டும். படித்து முடித்தவுடனேயே, "வரிகள் பிரமாதம்" என்று சொல்லி விட வேண்டும். Half the battle is won. எடுத்த எடுப்பிலேயே 'இன்னும் நன்றாக வரலாம்' என்று பொதுப்படையாகச் சொல்லிவிட்டால் நமக்குக் கொஞ்சமும் கவிதை ரசனையே இல்லையென்று கவிஞர்கள் நினைத்துக் கொள்வார்கள். அவர்களது ஆர்வம் குன்றிப் போகும்.

பிறகு கொஞ்சம் கொஞ்சமாக நமக்குத் தேவையான வகையில் ஒவ்வொரு வரியாக வேண்டுமானாலும் மாற்றி எழுதச் சொல்லி, பாடலை எழுதி வாங்கலாம். 'பல்லவி ரொம்ப அற்புதமாக வந்திருக்கிறது' என்று சொல்லி, மெல்ல மெல்ல அந்த முழுப் பல்லவியையும் மாற்றி எழுதி வாங்கிய சந்தர்ப்பங்கள் எனக்குண்டு.

இப்படித்தான் 'வாலி' ஒருமுறை பாடல் எழுதிய போது– முதலில் சில வார்த்தைகளையும் போகப் போக சில வரிகளையும் மாற்றியமைக்கச் சொல்லி, நான் நினைத்தபடியெல்லாம் சந்தோஷமாக மாற்றிக் கொடுக்க வைத்தேன். பாடல் அற்புதமாக அமைந்தது. எல்லாவற்றையுமே மாற்றி எழுதியிருக்கிறோம் என்று திடீரென்று உணர்ந்து கொண்ட வாலி,

"எல்லா வரிகளையுமே மாற்றச் சொல்லி விட்டீர்! நானும் மாற்றிக் கொடுத்து விட்டேன்! இந்தப் பிள்ளையார் சுழியை மட்டுமாவது அப்படியே வைத்துக் கொள்ளலாமா?" என்று சொல்ல,

அந்த 'கம்போஸிங்' அறையே சிரிப்பொலியினால் அடுத்த சில நிமிடங்கள் அதிர்ந்து கொண்டிருந்தது!

**"நீ ஒரு தடவை கூட சிரிக்காத ஒரு நாள் உன் வாழ்க்கையில் வீணாக்கப்பட்ட ஒரு நாள்"**

— Chamfort —

கவிஞர் வாலி அவர்களிடம் பேசிக் கொண்டிருந்தால் நிஜமாகவே வாழ்க்கை மிகப் பயனுள்ளதாக ஆகும். 5 நிமிடம் உரையாடிக் கொண்டிருந்தாலும் அந்த 5 நிமிடத்திற்குள் பத்து முறையாகிலும் வார்த்தைகளைப் pun பண்ணி ஜோக் அடிப்பார். அவர் ஒரு pun மன்னன்.

அவர் எழுதிய புதுக்கவிதைத் தொகுப்பு 'பொய்க்கால்குதிரை' என்ற புத்தகத்தின் தலைப்பைத்தான் அவரை ஒரு நடிகராக அறிமுகப்படுத்திய திரைப்படத்திற்கு வைத்தேன். அதே புத்தகத்திலிருந்து சில புதுக் கவிதைகளை 'அக்னி சாட்சி' திரைப்படத்திலே பயன்படுத்தியிருக்கிறேன். புதுக்கவிதை மீது எனக்கு ஒரு மோகம் ஏற்பட்டதற்குக் காரணம் கூட இவரது புத்தகந்தான்.

வாலி அவர்களை மீண்டும் ஒரு நடிகராகப் பார்க்கும் வாய்ப்பு எனது 'கையளவு மனசு' என்கிற Sun TV தொடர் இரண்டாம் பாகத்தில் கிடைத்திருக்கிறது.

"நடிப்பது சந்தோஷமாக இருக்கிறது" என்கிறார்.

"பாடல் எழுதும்போது நானே பிரசவிக்க வேண்டியிருக்கிறது. இங்கே நடிக்கவரும் போது என் குரலையும் முகத்தையும் உங்களிடம் ஒப்படைக்கிறேன். You deliver the baby" என்று படப்பிடிப்பின்போது சொன்னார்.

சர்வர் சுந்தரம் படம். எல்லாப் பாடல்களையும் கவியரசு கண்ணதாசன் எழுதினார். கடைசி நேரத்தில் இன்னொரு பாடலைச் சேர்க்க வேண்டுமென்று ஏவி. மெய்யப்பன் அவர்கள் விருப்பம் தெரிவிக்க, அவரது புதல்வர் குமரன் அவர்கள், தன்னுடைய collectionலிருந்து ஒரு ஆங்கிலப் பாடலை எடுத்து வந்து அதை எம்.எஸ். விசுவநாதன் அவர்களிடம் போட்டுக் காண்பித்தார். குமரன் அவர்களுக்கு நேர்த்தியான இசை ஞானம் உண்டு. எம்.எஸ்.விக்கும் அந்த டியூன் மிகவும் பிடித்துப்போனது. அந்த டியூனை அடித்தளமாக வைத்துக்கொண்டு ஒரு டியூன் போட்டார். 'இந்தப் பாட்டுக்கு வாலியை வைத்து எழுதச் சொல்லுங்கள்' என்று ஏவி.எம். சொல்லியனுப்பினார். அப்பொழுது கவியரசு ஊரில் இல்லை என்று நினைவு.

# நினைவலைகள்

படத்தின் எல்லாப் பாடல்களுமே hit தான். ஆனாலும் கடைசி நேரத்தில் ரிகார்ட் செய்யப்பட்டு படத்தில் சேர்க்கப்பட்ட இந் தப் பாடல்தான் super duper hit song ஆயிற்று.

*அவளுக்கென்ன*
*அழகிய முகம்!*
*அவளுக்கென்ன?*

30 ஆண்டுகளுக்கு முன்னால் வந்த இந் தப் பாடல் இன்னமும் டீவியிலும் ரேடியோ விலும் ஒலித்துக் கொண்டே இருக்கிறது. ஆம்! 1995 ம் ஆண்டில் அவரே எழுதிய 'முக்காபலா' என்கிற super hit பாடலுக்கு மத்தியிலும்!

**எ**னது முதல் பட 'கம்போஸிங்' அனு பவம்! எம்.எஸ்.வி. இசையமைக்கிறார். வாலி பாடல் எழுதுகிறார். படம் 'தெய்வத் தாய்'.

***"ஒரு பெண்ணைப் பார்த்து***
***நிலவைப் பார்த்தேன்***
***நிலவில் குளிர் இல்லை!"***

***"இந்தப் புன்னகை என்ன விலை?***
***இதயம் சொன்ன விலை!"***

வாலி எழுதிய இந்தப் பல்லவிகளை தயாரிப்பாளர் வீரப்பன் அவர்கள் அனுப வித்து ரசிக்க, எம்.எஸ்.வி. இசையமைக்கிறார்.

பல்லவி எழுதி டியூன் போடப்பட்ட பாடல்கள் அவை! முப்பது ஆண்டுகள் ஆகி யும் இந்தப் பாடல்கள் சலிப்பதில்லை... ஏன்?

அதே போலத்தான் வி. குமார் இசை யமைத்த 'புன்னகை மன்னன் பூவிழிக் கண் ணன்' என்கிற இருகோடுகள் பாடலும், 'அடுத்தாத்து அம்புஜத்தைப் பார்த்தேளா' என்கிற எதிர்நீச்சல் பாடலும்.

காலத்தாலும் அழிக்க முடியாத பாடல் கள் முதலில் பாடல் வரிகள் எழுதப்பட்டு பிறகு டியூன் போடப்பட்ட பாடல்கள்தான் என்பது என் தாழ்மையான அபிப்பிராயம்.

"முன்பெல்லாம் பாடல்கள் எழுதும் போது இயக்குநரோடும் இசையமைப்பாள ரோடும் கலந்து பேசிக் கொண்டு உணர்வு பூர்வமாகப் பாடல்கள் எழுத வேண்டியிருந் தது. இப்பொழுது டேப்ரிகார்டர், காஸெட்... இப்படிப்பட்ட அஃறிணைப் பொருள்களு டன் உரையாடிக் கொண்டே mechanical ஆகப் பாடல் எழுத வேண்டியிருக்கிறது" என்று தமாஷாகச் சொன்னார் வாலி! அவர் மேலும் சொன்னார் :

"முன்பெல்லாம் ஒரு பாடல் பிறப்பது என்பது பாடல் வரிகளுக்கும் இசைக்கும் சேர்த்துப் பிறக்கும் ஆரோக்கியமான குழந் தையாக இருந்தது. ஆனால் இன்று பிறக்கும் பாடல்கள் test tube குழந்தைகளாகப் பிறக்கின்றன."



# மகாநதி ஷோபனாவும் மாயாஜால பூதமும்

'**ரா**ஜா சின்ன ரோஜா' என்று ரஜினியும் குழந்தைகளும் டான்ஸ் ஆட, கூடவே கார்ட்டூன் யானையும் குருவியும் ஆடு வதைப் பார்த்திருக்கிறோம். அதே தொழில் நுட்பம் பயன்படுத்தி ஒரு 18–வார டி.வி. தொடர் தயாரித்து வருகிறார்கள்.

ஜூலையில் ஒளிபரப்பு ஆரம்பிக்கவுள்ள இத்தொடரின் பெயர் 'மை டியர் ஜீனி'.

ஜீனி என்கிற மந்திர சக்தி வாய்ந்த பூதம் பாத்திரம் கார்டூனாக வருகிறது. இதை ஓவியர் மருது உருவாக்கியிருக்கிறார்.

'மை டியர் ஜீனி'யில் மகாநதி ஷோபனா முக்கிய பாத்திரம் ஏற்றிருக்கிறார். சுமார் நாற்பது நாட்களுக்கு காரைக்குடி அருகே ஷூட்டிங் நடத்தியுள்ளார்கள்.

முதலில் நடிக நடிகையர்களை வைத்து ஷூட்டிங் முடித்து, அப்புறம் கார்ட்டூன் பாத்திரத்தை வரைந்து பொருத்தமான இடத்தில், சரியான கோணத்தில் சேர்க்கிறார்கள். தொழில்நுட்ப ரீதியாக இதில் நிறைய சிக்கல்கள். மேல்நாடு அள வுக்கு வசதி இங்கே கிடையாது.

மேலும் நடிக, நடிகைகள் பல சமயங் களில் கார்ட்டூன் கதாபாத்திரங்கள் பக்கத்தில் இருப்பதாகக் கற்பனை செய்து கொண்டு நடிக்க வேண்டி வரும்! செலவும் இரண்டு மடங்கு ஆகும்.

துணிந்து புதிய முயற்சி யில் இறங்கியுள்ளது குழு. காமெரா கலைஞர்: பி.சி. ஸ்ரீராமின் சீடர் முத்துக்குமரன்.

"**த**மிழ்நாட்டு ரசிகர்கள்தான் வணிக விஷ யங்களையும் ஆர்வத்தோடு பார்க்கிறார்கள். அதனால்தான் பி.பி.சி.யிலும் ஸ்டார் டி.வி.யிலும் 'இந்தியா பிசினஸ் வீக்' போன்ற வணிக நிகழ்ச்சிகளைத் தயாரிக்கும் எங்கள் யுனைடட் டெலிவிஷன்ஸ் (UTV) நிறுவனம், ஆங்கில மல்லாத வேறொரு மொழியில் நிகழ்ச்சிகளைத் தயாரிக்க எண்ணியபோது, முதலில் தமிழைத் தேர்ந்தெடுத்தோம். அதன் விளைவாகத்தான் ஜெ.ஜெ. டி.வி.யில் அரைமணிநேர 'வணிக உலகம்' நிகழ்ச்சி ஒளிபரப்பாகிறது!'' என்கிறார் யு.டி.வி.யின் சென்னைப் பிரிவு மேலாளர் சுரேஷ்.

— உல்லாசப் பறவை.

---

**ஜே.** ஜே. டி.வி. க்காக ஒரு கவிதைத் தொடர் தயாரித்துக் கொண்டிருக்கிறேன். புதுக்கவிதை வடிவத்திலே இருக்கும் ஒரு தொடர்கதை அது. எனது மூலக் கதையை புதுக்கவிதை வடிவத்திலே வாலி அவர்கள் தான் எழுதிக் கொண்டிருக்கிறார்.

மரணம் பற்றி ஒரு பெண் எழுதுவதாக அதில் ஒரு புதுக்கவிதை வருகிறது. அந்த இடத்திலே வாலி எழுதியிருந்தார் :

"பிரசவம் என்கிற வார்த்தையிலேயே 'சவம்' என்கிற வார்த்தையும் அடக்கம். பிறப் புக்குள் இறப்பும் அடக்கமென்று நமக்குப் புரிகிறதல்லவா?''

இந்த வரிகளைக் கையெழுத்துப் பிரதி யில் படித்துவிட்டு, உடனே நான் அவருக்கு போன் செய்து பாராட்டினேன்.

அப்பொழுது சொன்னார் :

"ஆனந்தவிகடன் பத்திரிகையிலே நான் எழுதி வரும் ராமாயணம் கவிதைத் தொட ரின் முதல் அத்தியாயத்தைப் படித்துவிட்டு உடனே கலைஞர் அவர்கள் எனக்கு போன் செய்து தனது பாராட்டுக்களைத் தெரிவித் தார். பிற கலைஞர்களை உடனுக்குடன் பாராட்டுவதில் கலைஞரும் நீங்களும் ஒன்று'' என்று.

மூன்று தலைமுறை இயக்குநர்களைச் சந்தித்து முப்பத்தைந்து ஆண்டுகளாக திரைத்துறையில் தனக்கென்று உரிய இடத் தைத் தக்க வைத்துக் கொண்டிருக்கும் வாலி, ஒரு நிறை குடம்.

அவரது ஹாஸ்ய உணர்வு அவரது சிறப்புக்கும் சீரிய வாழ்க்கைக்கும் உறுதுணை யாக நிற்கிறது.

A humorous frame of mind is perhaps the gift of god. Blessed is he who possesses it.

— V.V. GIRI —

(தொடரும்)

# நாளைய வாழ்வறியும் நறுங்கலை
# "ஜோதிடப் பயிற்சி"

**(தபால்வழி போதனா முறை)**

பிறந்த நேரம் கொண்டு பெருமையுற வாழ்வானா? பிழைபட்டு மடிவானா? கோடி செல்வமீட்டும் கோமானா? அன்றி கோவணாண்டி கோலங்கொண்ட பேய் மகனா? என்றெல்லாம் எள்ளளவும் பிழையின்றி சொல்லும் கலை ஜோதிடத்தைக் கசடறக் கற்றுத் தேற உற்ற வேளை, அன்றைய அறிஞர்கள் தொகுத்து வைத்த அம்சங்கள் மாறாமல் - அப்படியே சொல்லுகின்ற ரகஸிய முறைகளோடு - அரிய தமிழ்க் காவியமாய் 250 உதாரண ஜாதகங்களுடன் உவமை விளக்கங்களுடன் பாடமாக்கித் தருகின்றோம். இது கலையை எடுத்தோத உற்றவர் எவருமில்லை என்ற நேரத்தில் 30 ஆண்டுகளாய் முரசொலித்து வருகின்ற தலைசிறந்த கலைக்கூடம் தென்னகத்தில் இது ஒன்றே. 12 ராஸிகளில் 9 கிரக நாயகர்களின் நர்த்தன நடனங்கள் - அவற்றின் அபினய கரங்களில் ஆக்கப்படும் வாழ்வின் வண்ணக் கோலங்கள் அத்தனையும் அற்புதமாய் வடித்தெடுத்து வைக்கின்றோம். எவ்வயது இனத்தாரும் கற்றுக் கொள்ளும் எளிய முறையில் இனிய தமிழ் நடையில் பாடங்களை பலாச்சுளைகளாகப் படைத்திருக்கின்றோம். இதுவரை எம்மிடம் கற்ற பல்லாயிரக்கணக்கான மாணவர்கள் நாடெல்லாம் நலம் சொல்லி - ஜோதிட நாயகர்களாய்த் திகழ்கின்றனர். ஜாதகத்தைக் கண்டவுடன் வாழ்வில் வல்லவரா? வாடிப் போன கொடியாகி மாள்வாரா? கோமஸ்வரர் ஆவாரா? கொடிகட்டிப் பறப்பாரா? குலமகளை மணப்பாரா? குபேர குழந்தைகளைப் பெற்றெடுப்பாரா? உலகத்தில் புகழ் மகனா? உவமையற்ற கலைமகனா? என்றெல்லாம் இம்மியும் பிசகாமல் சொல்லுகின்ற சூட்சும வழிகள் சொல்லிடப்படுகின்றன. கற்று முடித்தார்க்கு 'ஜோதிடக் கலைஞர்' என்ற பட்டமும் சான்றிதழும் தருகின்றோம். வாருங்கள் - வருங்காலம் இதுதான் என்று எவருக்கும் இறுதியாய் - உறுதியாய் எடுத்துச் சொல்லும் - இணையிலாத் திறன்பெற்ற வல்லுனராய்த் திகழுங்கள்.

சேரும் முறை அறிய - செலுத்தும் கட்டணம்தனை அறிய 10.8.1995 தேதிக்குள் தெளிவான முகவரியுடன் மனுச் செய்து கொள்ளுங்கள். விவர படிவம் உடனே அனுப்புகின்றோம்.




பிரபல ஜோதிடர் : ஜோதிட ஆசிரியர்,

**ஸ்ரீமத் ஜெயவீர தேவா, யோகி,**

இராஜயோகப் பயிற்சியாளர்.

பிளாட் எண் : 204, அண்ணாநகர்,

மதுரை - 625 020.

தொலைபேசி : 43412; 46634.

# நீங்கள் கேட்டவை

— தராசு



• 'கவிழ்க்க சதி!'



• "போதை இல்லை!"



• மாயாஜாலங்கள்

## கள்ளில் போதை இல்லை என்கிறாரே என்.டி.ஆர்?

● **கே. வேலுச்சாமி, சிறுநாயக்கன்பட்டி.**

*? கள்ளில் போதை இல்லை என்கிறாரே என்.டி..ஆர்.?*

! காதல் போதை, அதிகார போதை இவற்றை ஒப்பு நோக்க அது ஒன்றுமில்லை என்கிறாரோ, என்னவோ!

● **கோபி. நாகராஜன், கலிங்கியம்.**

*? பெரிய இடத்துத் திருமணம் எப்படி இருக்கும்?*

! நிச்சயதார்த்தத்துக்கே சாலைகளில் கெடுபிடி; நாளிதழ்களில் பக்கம் பக்கமாய்ச் செய்திகள், விளம்பரங்கள்; முதல்வர் வீட்டிலிருந்தே முழு நீள அறிக்கை என்னும்போது கல்யாணத்தன்று கேட்கவா வேணும்! டிராஃபிக் ஜாம் உத்தேசித்து விடுமுறை; விளம்பரங்களை உத்தேசித்து இலவச இணைப்பு; முதல்வர் இல்லத்தில் அறிக்கை அலுவலகம்...

● **புளியரை கணேசன், சென்னை.**

*? 'வரவேற்பு விழாக்களில் குழந்தைகள் வேண்டாம்' என்று மகாராஷ்டிர முதல்வர் ஜோஷி அறிவித்துள்ளாரே?*

! சிறுமி ஒருத்தி மயங்கி விழுந்தது அவர் கண்ணில் படாமல் போயிருந்தால் இந்த அறிக்கை வந்திராது!

● **சுந்தர் அழகேசன், திருச்சுழி.**

*? லவ்பேர்ட்ஸ் படத்தில் பிரபு தேவாவுடன் ஆட இருக்கும் அப்பாச்சி இண்டியனின் ஆட்டம் பார்த்திருக்கிறீரா?*

! சானல் 'வி'யில் பார்க்க நேரும். ஆட்டமெல்லாம் சாதாதான். ஆனால் மிக்ஸியில் போட்ட ரிப்பன்பக்கோடா மாதிரி வார்த்தைகளோடு ஒரு குஸ்தி நடத்துகிறார் பாருங்கள், அது ஒரு ஜோர்தான்.

● **ரம்யாம்மா, நெய்வேலி.**

*? சட்டசபை நிகழ்ச்சிகளை நேரடியாக டீவி மூலம் ஒளி பரப்பினால்...?*

! அப்புறம் WWF ஐ ரசிக்க ஆள் இருக்க மாட்டார்கள்!

● **மா. பழனிச்சாமி, கோவை.**

*? சிவாஜி ஏற்படுத்தப் போகும் புதிய சொந்தம் அவரது இமேஜை பாதித்து விடாதா?*

! அரசியல் இமேஜ் அவருக்கு எப்போதுமே இல்லை. சினிமாவைப் பொறுத்தமட்டில் ஆல்மோஸ்ட் ரிடயர்ட். அப்புறமென்ன?

● **மு. இரவிச்சந்திரன், சேலம்.**

*? 'ரசாயன உரத்தின் விலையை ஏற்ற வேண்டாம்' என்று மத்திய அரசுக்கு 'ஜெ' கடிதம் எழுதுகிறாரே, 'அடிக்கடி பின் கட்டணங்களையும் பால் போன்றவற்றின் விலைக*



• இமேஜ் பாதிப்பு?



• நிரூபித்தார்!




• வார்த்தைகளோடு குஸ்தி!

*னையும் உயர்த்தக் கூடாது' என்று தமிழக அரசுக்கு பொதுமக்கள் கடிதம் எழுதலாமா?*

! தாராளமாய் எழுதலாம். ஆனால் 'அம்மாவுக்கா டா கடிதம் எழுதுகிறாய்?' என்று யாராவது "அன்பாக விசாரிக்க" ஆரம்பித்தால் நான் பொறுப்பல்ல!

● **எஸ். குமார், காரைக்குடி.**

*? ஆளுனரிடம் மனு கொடுப்பது என்பது தமிழ்நாட்டில் மட்டும்தானே உள்ளது?*

! மனு கொடுக்கிற நிலைமை என்று சொல்லுங்கள்.

● **எம். பிரபு, குமராட்சி.**

*? அரசியலில் இப்போது யாருக்கு ராஜயோகம்?*

! வளர்ப்பு மகன்களுக்கு.

● **எஸ். எஸ். டி. ராஜன், சிறுதையூர்.**

*? தமிழ்நாட்டில் எங்கோ நடக்கும் சில வன்முறைகளுக்கும் அசம்பாவிதங்களுக்கும் ஜெயலலிதா தான் காரணம் என்ற பாணியில் கல்கி எழுதி வருவதாக எனக்குத் தோன்றுகிறது. இதற்கு தராசு என்ன பதில் கூறுகிறார்?*

! பத்திரிகையின் ஏதோ ஒரு மூலையில் தவறான செய்தி வந்தாலும் பத்திரிகை ஆசிரியர்தான் பொறுப்பு ஏற்க வேண்டும். அது போலத்தான் மாநிலத்தில் நடக்கும் குற்றங்களுக்கு முதல்வர் (காரணமாகா விட்டாலும்) பொறுப்பு ஏற்க வேண்டியதாகிறது. பத்திரிகையின் தரம், ஆசிரியரைப் பொறுத்து அமைவது போல, ஆட்சியின் தரம் முதல்வரைப் பொறுத்து அமையும்.

● **ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.**

*? எழும்பூர் மார்ஷல் சாலையில் கோடி ரூபாயில் ம.தி.மு.க. சொத்துக் கட்டடம் வாங்க உத்தேசித்துள்ளது பற்றி...?*

! சொத்துப் பிரச்னையால் உருவான கட்சி, சொத்து சேர்க்கிறது. சொத்துப் பிரச்னை உருவாகாமல் உஷாராயிருக்கட்டும்.

● **இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.**

*? மாயாவதியின் மாயாஜாலங்கள் இன்னும் எத்தனை நாட்களுக்கு எடுபடும்?*

! தாமரை தாங்கும் வரை.

● **எஸ். என். ராகவன், பெல்லாரி.**

*? உத்தரப்பிரதேச ஆளுனர், முதல்வர் முலாயம்சிங் யாதவை அகற்றி, மாயாவதியை முதல்வராகப் பதவி ஏற்கச் செய்தது நியாயம்தானா?*

! ஜனநாயகத்தில் பெரும்பான்மை பலம்தான் ஆட்சி அமைக்க முதல் தேவை என்னும்போது ஆளுனர் வேறு என்ன செய்ய முடியும்? அவர் செய்தது சரி என்பதை மாயாவதி பெற்றுள்ள நம்பிக்கை வோட்டுக்கள் உறுதி செய்கின்றனவே.

● **வி. ராஜேந்திரன், சின்னசேலம்.**

*? 'அமெரிக்கா எனது அரசைக் கவிழ்க்க சதி செய்தது' என்று முலாயம்சிங் யாதவ் கூறுகிறாரே?*

! தவறுகளையும் அதன் விளைவான தோல்விகளையும் ஒப்புக் கொள்ள விரும்பாதவர்கள் சி.ஐ.ஏ., கே.ஜி.பி. என்று துணைக்கு அழைப்பது இங்கு வாடிக்கை.

● **வி. கணேசன், கோவில்பட்டி.**

*? குமுதம் இதழில் ஏற்பட்டுவரும் மாற்றங்கள் பற்றி...?*

! ஆசிரியர் மாற்றமா? உள்ளடக்க மாற்றமா? எதைக் கேட்கிறீர்கள்? - விளக்கம் தேவை!

● **த. சந்திரசேகரன், சென்னை.** ❑

*? ஜெ.க்கு வாரிசு கிடையாது; அதனால் கொள்ளை அடிக்க மாட்டார் என்று நினைத்து வோட்டுப் போட்டால்...?*

! இணை பிரியாத் தோழி உண்டு. இன்ஸ்டண்ட் வளர்ப்பு மகனும் உண்டு என்று நிரூபித்து நாமத்தைப் போட்டார்!

---

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
த. சந்திரசேகரன்,
146, பி.வி. கோயில் தெரு,
சென்னை - 13.

---

கல்கி கிருஷ்ணமூர்த்தி அறக்கட்டளையிலிருந்து தக்க சமயத்தில் எனது கல்விக்கான உதவித் தொகை பெற்று, 1989 ல் திருச்சி ரீஜனல் இன்ஜினீரிங் கல்லூரியில் படித்தேன். கல்லூரியிலேயே முதல் மாணவியாகத் தேறினேன். தற்போது பங்களூரில் ஸி.டாட்(Center for Development of Telematics)டில் பணிபுரிகிறேன். என்னைப் போலவே இந்த அறக்கட்டளையிலிருந்து உதவித்தொகை பெற்று முன்னேற பல ஏழை மாணவ மாணவியர் துடிப்புடன் இருப்பார்கள். எனவே எனது நன்கொடையாக ரூ. 1000/- அறக்கட்டளைக்கு அனுப்பி வைக்கிறேன்.

— எஸ். மகேசுவரி

மகேசுவரியின் பெருந்தன்மை ஒருபுறமிருக்க, அவர் கூறியுள்ளது போலவே ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கில் மாணவ மாணவியர் உதவிகோரி உருக்கமாக எழுதுகிறார்கள். உதாரணமாக :

●● நான் கால் ஊனமுற்ற ஏழைப் பெண். படிக்க வேண்டும் என்ற பேராவலால் காந்தி கிராமம், கிராமிய பல்கலைக் கழகத்தில் சேர்ந்து விட்டேன். எந்த உதவியும் கிடைக்கவில்லை. அப்பா கிராமத்தில் இருக்கிற ஏழை ஜோதிடர். குடும்பம் நடத்தவே முடியாத நிலை. என் இதய தாபத்தைத் தெரிவித்து விட்டேன். என் கல்விக்கு உதவி கோருகிறேன்.

- ஆர். பாவாம்ருதா.

●● குடியாத்தம் ராஜகோபால் பாலிடெக்னிக்கில் நல்ல மதிப்பெண்கள் பெற்று தற்போது இரண்டாம் ஆண்டு படிக்கிறேன். என் தந்தை சென்ற ஆண்டு காலமாகி விட்டார். ஏழைக் குடும்பம். எனக்கு படிப்பதற்காக உதவித் தொகை வழங்குமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

- க. முருகேசன்.

கல்கி கிருஷ்ணமூர்த்தி அறக்கட்டளை நிறுவப்பட்டபோது முதல் ஆண்டில் ரூ. 10,000/- மட்டுமே உதவித் தொகை வழங்கியது. படிப்படியாக அதிகரித்து நடப்பு கல்வி ஆண்டுக்கு ரூ. 55,000/- அளிக்கிறது. விண்ணப்பங்களின் பரிசீலனை முடியும் போது இது மேலும் உயரக்கூடும். மாணவர்கள் படிப்பில் சிறந்தவர்களாகவும் பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களாகவும் இருக்க வேண்டும் என்பது மட்டுமே நிபந்தனை. இதற்கு பள்ளி அல்லது கல்லூரி முதல்வரின் சான்றிதழ் கோரிப் பெறப்படுகிறது. அறங்காவலர்கள் விண்ணப்பங்களைக் கவனமுடன் பரிசீலித்து, விவாதித்து உதவித் தொகை பெற ஒவ்வொரு மாணவனையும் மாணவியையும் தேர்ந்தெடுக்கின்றனர்.

வாழ்க்கையுடன் போராடி, வெற்றி பெறத் துடிக்கும் இளம் மாணவருக்கு உதவும் ஆர்வம் உங்களிடம் இருக்குமானால் இயன்ற அளவு நன்கொடையை கல்கி நினைவு அறக்கட்டளைக்கு அனுப்பி வைக்கலாம்.

டிராஃப்ட் அல்லது எம்.ஓ. அல்லது காசோலை மூலம் Kalki Krishnamurthy Memorial Trust என்ற பெயருக்கு மட்டுமே அனுப்புதல் வேண்டும். நன்கொடைகளுக்கு வருமான வரி விலக்கு உண்டு.

## கல்வி பெறத் துடிக்கிறார்கள்; கருணை கொண்டு உதவுங்கள்!

முகவரி :

**கி. ராஜேந்திரன்,**
**(நிர்வாக ஆசிரியர், கல்கி)**
**நிர்வாக அறங்காவலர்,**
**கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை,**
**நெ. 1, ஐந்தாவது தெரு,**
**ஏரி வட்டம்,**
**நுங்கம்பாக்கம்,**
**சென்னை - 600 034.**



• பாவாம்ருதா

• க. முருகேசன்

# வட்டமேஜை

♦ அமைச்சர்களையும் எம்.எல்.ஏ.க்களையும் கொத்தடிமைகளாகக் கருதுவதிலாகட்டும், தன் னால்தான் எல்லாமே நடக்கிறது என்று நினைப்பதிலாகட்டும், சந்தேகமே இல்லாமல் மாயாவதியும் ஒரு புரட்சித் தலைவிதான்!
அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

♦ தமிழனைத் தமிழன் தாக்குறது தப்பா? நாங்க அண்ணன் தம்பிங்க! அரிவாளால் வெட்டிக்கு வோம், ஆஸிடையும் ஊத்திக்குவோம்! வக்கா லத்து வாங்கினா, வக்கீலையே வாட்டிடுவோம்! அடுத்தவனை அடிக்க விடுவோமா?
தஞ்சாவூர்-7, வளர்மதி ஆசைத்தம்பி.

♦ அப்பாவி ஏழை மக்களின் ஆதரவைப் பெற வேணுமென்றால் 'அரிசி'யின் உதவியைத்தான் நாட வேண்டும் எந்த அரசியல்வாதியும்! கைக் கோல் கன்றைக்காட்டி பசுவிடம் பால் கறக்கும் கலையைப் போன்றதுதான் இது.
கும்பகோணம், கே. என். பாலகிருஷ்ணன்.

♦ தமிழ்த் திரையுலகில் வட இந்திய நடிகை களின் ஆதிக்கம் பற்றிய கேள்விக்கு, தராசின் பதில் 'நச்' சென்றிருந்தது.
தஞ்சாவூர்-5, வனிதா ரவி.

♦ ஒரு 'கவர் ஸ்டோரி'க்காக 'கல்கி'யையே மணக்க வைத்து விட்டீர்களே...! சபாஷ்!
திருப்பூர், எஸ். ரமேஷ்குமார்.

♦ "இவரல்லவா தலைவர்" கட்டுரை, மறைந்த காயிதேமில்லத் அவர்கள் பற்றி, இதுவரை பல ருக்குத் தெரியாத, பல அரிய செய்திகளைத் தருகிறது.
திருப்பத்தூர், தேவந்தி துரைராஜ்.

♦ திருக்கல்யாண விருந்தின் விதவிதமான வகைகளை பட்டியலிட்டுக் கூறும் ஓதுவாரின் பசியால் வாடும் பரிதாப நிலையை நினைக்கும் போது, கதை படிக்கின்றோம் என்ற எண்ணமே இன்றி, கண்ணில் நீர் கட்டி விட்டது. வயிறு நிறைந்து விட்டதாகக் கூறி அவர் வெளியேறும் போது வாய்விட்டே அழத்தோன்றியது. சிறப்பான (கல்யாண) விருந்து.
நாகப்பட்டினம், நாகை சந்திரா.

♦ துணிவில்லாதவர்கள் காதலிக்கவே கூடாது. அப்படிக் காதலித்தால் சங்கரியின் நிலைதான் அவர்களுக்கும்! அருமையான கதை. சபாஷ் தமயந்தி!
ஒசூர், வீ.ஆர். ராஜேஷ்.

♦ இந்த வார சினிமா விமர்சனத்தைப் படித்த பிறகு உமக்கு என்ன கொடுக்கலாம் என்று தீவிரமாக யோசித்துக் கொண்டிருக்கிறேன்.
பொன்மலை, ஐ. மனோகர் இன்பராஜ்.

♦ முறைமாமன் படமே ஒரு உங்கள் விமர்சனம் ஒரு
ஈரோடு, டி. சந்திரன்.

## சிறப்புக் கடிதம்
(ரூ. 20 பரிசு பெறுகிறது)

♦ தமிழகத்தை இனி நம் முதல்வரால் காப்பாற்ற முடியாது என்று புலம்பியிருக்கிறீரே, வெறும் கள், சாராயம் எனக் குடித்துக் கொண்டிருந்த தமிழன் இன்று விஸ்கி, பிராந்தி எனக் குடித்து முன்னேறிக் கொண்டிருப்பது உமக்குத் தெரியவில்லையா? வெறும் ஐந்தும் பத்தும் லஞ்சம் வாங்கிய/ கொடுத்த தமிழன் இன்று ரொக்கமாக லஞ்சம் வாங்கி/ கொடுத்து முன்னேறிக் கொண்டிருப்பது உமக்குத் தெரியவில்லையா? இதையெல்லாம் விட்டுத் தள் ளுங்கள்! தமிழன் உயர்ந்து நிற்கிறான் என்பதை உலகுக்குப் பறைசாற்றும் புரட்சித் தலைவியின் கட்-அவுட் கூட உமது கண்ணுக்குத் தெரியவில் லையா?
தஞ்சை-1, வெ. முருகானந்தம்.

# அடுத்தவனை அடிக்க விடுவோமா?

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka